

# ஸ்ரீராமாநுஜன் 93

வருடச்சந்தா ரூ. 5

ஆசிரியர் :—P. B. அண்ணங்கராசாரியர், க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

1956 செப்டம்பர், துன்முகிவூ ஆவணிமீ

# ஸ்ரீராமாநுஜன் 93

சென்னை ஸத்ஸம்ப்ரதாயப்ரகாசந ஸபையின் மூலமாக
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.
ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சி. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 8 | துன்முகி௵ ஆவணிமீ 1956௵ ஸெப்டம்பர்மீ | மலர் 9 |
|---|---|---|


## இராமாநுச நூற்றந்தாதி

கட்டப்பொருளை மறைப்பொருளென்று * கயவர்சொல்லும்
பெட்டைக்கெடுக்கும்பிரானல்லனே * என்பெருவினையைக்
கிட்டிக்கிழங்கொடு தன்னருளென்னுமொள்வாளுருவி
வெட்டிக்களைந்த * இராமானுசனென்னும் மெய்த்தவனே. (93)

## சந்தா செலுத்தியவர்களின் பெயர்கள்.

192 V. கேசவுலு நாயுடு ஸ்ரீதரன். ஆத்தூர்.
193 T. D. ரங்கராமாநுஜய்யங்கார் திருமாணிக்குழி.
194 வித்வான் ஸீதாராமய்யங்கார், மதுரை.
195 R. ஸௌந்தரராஜன், கண்டாக்டர், R. S. புரம், கோயமுத்தூர்.
196 S. ஸ்ரீனிவாஸய்யங்கார், பரமகுடி.
197 A. கோபாலய்யங்கார், ஆமூர்.
198 ஸ்ரீதர்மேச்வரய்யங்கார், கோயமுத்தூர்
199 A. K. ராஜகோபாலன் ராஜகோட்.
200 S. A. ஸ்ரீநிவாஸய்யங்கார், கர்னல், மல்லாபுரம்.
201 D. ராமலிங்கரெட்டியார், செய்யார்.
202 K. R. சக்ரவர்த்தியாசார்யர், மந்தஸோர்.
203 கூரம் வீரவல்லி நரஸிம்மாசாரியர், அம்ருதூர்.
204 K. S. S. ராமாநுஜம், கல்கட்டா.



☞ எங்கள் ஏஜண்டு ஸ்ரீமான் G. ரங்கைய நாயுடு மூலம் சந்தா செலுத்திய சென்னை மெம்பர்களின் பெயர்கள் மார்கழி மாதத்து இதழில் வெளியாகும். பாக்கியுள்ளவர்கள் உடனே செலுத்துக.

சந்தாதாரர்களுக்கு அறிவிப்பு:—பழைய வருஷங்களின் சந்தாபாக்கியும் நிகழும் 56-ம் வருஷத்துச் சந்தா பாக்கியும் செலுத்தவேண்டியவர்கள் பலரிருக்கிறார்கள். அவர்களுக்குத் தபால் எழுதினாலும் பதில் இல்லை. அவர்களின் கௌரவத்தையறிந்து நாம் பத்திரிகையை நிறுத்தாமல் அவர்களுக்கு அனுப்பிவருகிறோம். அந்த கௌரவத்தை அவர்கள் காப்பாற்றிக் கொள்ளவேண்டுமல்லவா? கவனிக்கவேணுமென்று மிகவும் கேட்டுக்கொள்ளுகிறோம்.

## பத்ராதிபரின் விண்ணப்பம்.

இவ்விதழில் இரண்டு நூல்களைத் தொடங்கியிருக்கிறேன். இதைப்பற்றிச் சிறிது விஜ்ஞாபனம் கேண்மின். அடியேன் திவ்யப்ரபந்த திவ்யார்த்ததீபிகை எழுதத்தொடங்கின போது, பூர்வாசார்யர்களருளிச்செய்த ஸகல ஸ்தோத்திரங்களுக்கும் மணிப்ரவாள நடையில் வியாக்கியானமெழுதத் தொடங்கினேன். முகுந்தமாலை தொடங்கி நக்ஷத்ரமாலிகையீறாக

ஸகல ஸ்தோத்திரங்களுக்கும் நிச்சேஷமாக விரிவும் தெளிவுமுள்ள வியாக்கியானங்களை யெழுதி வெளியிட்டிருக்கிறேனென்பது அனைவருமறிந்ததேயாகும். வேதாந்த தேசிக ஸ்தோத்திரங்களுக்குமட்டும் உரை பெரும்பாகம் சேஷித்து நிற்கின்றது; இதுகாறும் ஐந்தாறு ஸ்தோத்ரங்களுக்கு மட்டுமே உரை வெளியிடப்பட்டிருக்கின்றது. மற்ற ஸ்தோத்ரங்களுக்கும் க்ரமேண உரையை வெளியிட்டுப் பூர்த்திசெய்யவேணுமென்னுமவா அதிகரித்திருக்கின்றது. பகவத்பாகவத விசேஷகியமனத்தினால் ஏற்றுக்கொண்டு நடத்திவருகிற பல காரியங்களுக்கிடையே இது முக்கியமாகச்செய்து முடிக்கவேண்டிய கார்யமென்பதை அறிந்திருக்கிறேன். "சேஷாயுஷ்யபி சேஷிதம்பதியாதீக்ஷாமுதீக்ஷாமஹே" என்று தேசிகனருளிச்செய்தபடி இவ்விஷயத்தில் திவ்ய தம்பதிகளின் திருவருளையே முக்கியமாக நிரீக்ஷித்து நிற்கின்றேன். இடையில் விச்சின்னமாயிருந்த இந்த கைங்கரியம் இவ்விதழில் ஆரம்பமாயிருக்கின்றது. இது இனி இடையறாது தொடர்ந்து நடந்துவருமாக.

இவ்விதழில் இரண்டாவது நூல் கம்பரின்பக் கவித்திரட்டு என்பது. இது, சென்ற கார்த்திகைமாதத்திலேயே அச்சிட ஆரம்பிக்கப்பட்டது. ஆனால் "தானே எழுதிய தன் சரிதை"யின் காரணமாக இது வெளிவரத் தடைபட்டிருந்தது. இஃது இப்போது வெளிவரத்தொடக்கமாயிற்று. இனி இதுவும் தொடர்ச்சியாக வெளிவரும். இந்நூலின் முன்னுரையை முக்கியமாக வாசிப்பது.

---

## பெரியாரின் பரமபத ப்ராப்தி.

ஸ்ரீவைஷ்ணவவுலகமும் தமிழுலகமும் மிகுந்த சோகக்கடலில் மூழ்க நேர்ந்துவிட்டது. திருவல்லிக்கேணியில் எழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபய வே. வைத்தமாநிதி முடும்பை. கோபால க்ருஷ்ணமாசார்யஸ்வாமி, நிகழும் ஆவணித்திங்கள் 11௨ ஞாயிற்றுக்கிழமையன்று (26-8-56) மாலை தமது திருமாளிகையில் அநாயாஸமாகத் திருநாட்டுக்கெழுந்தருளினார். இந்த ஸ்வாமிக்கு எழுபத்தைந்து திருநக்ஷத்திரங்களுக்கு மேலாகிறது. இரண்டொருமாதமாகவே திருமேனியில் அசக்தியுண்டாகி யிருந்தது. ஆனாலும் தம்முடைய பணிகளை நிறுத்தாமலே செய்துவந்தார். திருநாட்டுக்கெழுந்தருளினவன்றும் பகலில் சற்று விச்ராந்தி செய்துகொண்டு பிறகு எழுதுவது திருத்துவது முதலிய வழக்கமான செயல்களைச் செய்துகொண்டேயிருந்து மாலை நாலரைமணிக்குமேல் ஈஸிசேரில் சாய்ந்து கண்வளர்ந்தார். நித்திரை செய்கிறாரென்றே அகத்திலுள்ளவர்கள் நினைத்திருந்தார்கள். ஆறுமணிக்கு வந்துபார்க்க ஆறாத்துயரமாய் விட்டது. "வைகுந்தம் புகுவது மண்ணவர்விதியே."

இந்த ஸ்வாமி உபயபாஷாப்ரவீணரென்று குலாவப்பட்டிருந்தவர். கீர்த்திமூர்த்தியான வை. மு. சடகோபராமாநுஜாசார்ய ஸ்வாமிக்கு இவர் ஸஹோதரப்ராயராதலால் இளமையில் அவரிடமே கல்வி கற்று அவரோடுகூடவே பழகி உரையெழுதும்பணியில் மிக்க தேர்ச்சி பெற்றார். அந்த ஸ்வாமி தொடங்கியிருந்த பல காரியங்களை மிக மேம்பாடாகப் பூர்த்தி செய்தவர் இந்த ஸ்வாமியே. பள்ளிக்கூடப் பாடங்களுக்கெல்லாம் பல வாண்டுகள் டெக்ஸ்டு நோட்ஸ் வெளியிட்டு வந்ததோடு, கம்பராமாயணம் முதலிய அரிய பெரிய நூல்களுக்கு உரைகளைப் பூர்த்திசெய்து தேசமெங்கும் நிரம்பிய புகழ்பெற்றவர் இந்த மஹான். வெறும் தமிழறிவோடு நில்லாமல் நம் பூர்வாசார்ய க்ரந்தங்களை ஸம்ப்ரதாய பரம்பரையில் கேட்டுணர்ந்த ஞான விளக்கமும் இந்த ஸ்வாமியிடத்தில் அதிசயிக்கத்தக்கதாயிருந்தது. இந்த ஸ்வாமியின் திருவுருவப்படத்தையும் மற்றும் பெருமைகளையும் அடியேனுடைய "தன் சரிதை" யில் பக்கம் 75ல் காண்க.

வேதநூற் பிராயம் நூறுக்குமேலு மெழுந்தருளியிருந்து லோகோபகாரங்களை விசேஷமாகச் செய்து போரவேண்டியவரான இந்த ஸ்வாமியை எம்பெருமான் இப்போதே திருவடி சேர்த்துக்கொண்டது அவனுடைய நிரங்குச ஸ்வாதந்த்ரிய ப்ரயுக்தமேயாகும். இவருடைய அத்விதீயரான திருக்குமாரர் V. M. நரஸிம்ஹம் புருஷ ஸிம்ஹமாக விளங்கிவருகிறார்.

ஸ்ரீ:

ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன் திருவாய்மலர்ந்தருளிய ஸ்தோத்ரங்களுக்கு

ஸ்ரீகாஞ்சீ ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதீச

ப்ரதிவாதி பயங்கரம் **அண்ணங்கராசாரியர்** இயற்றிய

வியாக்கியானம் கொண்ட

---

# தேசிக ஸ்தோத்ரமாலா 2.

---

— இரண்டாவது மலர் —

**ந்யாஸதசகம், பகவத் த்யாந ஸோபாநம், தசாவதார ஸ்தோத்ரம், அபீதிஸ்தவம், கோபால விம்சதி, யதிராஜ ஸப்ததி.**

---

ஸ்ரீ ராமாநுஜன் வெளியீடு.

சென்னை ரத்னம் பிரஸ்ஸில் பதிப்பிக்கப்பட்டது.

இதன் விலை 2—0—0

முதல் மலரின் விலை 1—8—0

கிடைக்குமிடம்:

க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

**1956—57.**

# ஸ்ரீகாஞ்சீ க்ரந்தமாலா கார்யாலயத்தின்

# விளம்பரம்

## ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய க்ரந்தங்களெல்லாம் இங்கே கிடைக்கும்.

---

ஏறக்குறைய முப்பது வருஷகாலமாக நடைபெற்று வருகின்ற நமது க்ரந்த மாலா கார்யாலயத்தில் ஸம்ஸ்க்ருதம், தமிழ், தெலுங்கு, ஹிந்தி ஆகிய நான்கு பாஷை களிலும் பலபல நூல்களும் மாதாந்தப் பத்ரிகைகளும் வெளியிடப்பட்டு வருகின்றன. ஆளவந்தார் பகவத் பாஷ்யகாரர் கூரத்தாழ்வான் பட்டர் நம்பிள்ளை வேதாந்த தேசிகன் மணவாள மாமுனிகள் முதலான பூர்வாசார்யர்களாலருளிச் செய்யப்பட்ட ஸம்ஸ்க்ருத க்ரந்தங்களும் மணிப்ரவாள க்ரந்தங்களும் தேவநாகரி, தெலுங்கு, தமிழ் லிபிகளில் பதிப்பிக்கப்பட்டிருக்கின்றன.

பகவத் பாஷ்யகாரரருளிச்செய்த ஸ்ரீபாஷ்யம் முதலிய ஸகல க்ரந்தங்களும் ஒரே ஸம்புடமாக மிகச்சிறந்த முறையில் தேவநாகரி லிபியில் ஸமீப காலத்தில் வெகு நேர்த்தியாக அச்சிடப்பட்டு வெளியாயிருக்கின்றது. விலை ரூ. 15—0—0 தபால் செலவு 2—2—0.

பகவத்விஷயம் என்று ப்ரஸித்தமான நம்பிள்ளையீடு தனிப்பட பாராயணத் திற்கு ஸௌகரியமாக தெலுங்கு லிபியிலும் தமிழ் லிபியிலும் தனித்தனியே [இரண் டிரண்டு ஸம்புடமாக] அச்சிடப்பட்டிருக்கிறது. விலை ரூ. 25—0—0

ஸ்ரீவேதாந்த தேசிக க்ரந்தமாலை வெகுநாளாகவே அச்சிடப்பட்டு உலகம் பரவியிருக்கின்றது. சிறந்த பயிண்டுடன் கூடியவிது முழுவதும் 45 ரூ. விலை யுள்ளது. தேவநாகர லிபி. ரைல்வே பார்ஸல் மூலமாகவே கிடைக்கும்.

மணவாள மாமுனிகளருளிச்செய்த வியாக்கியான க்ரந்தங்கள் கொண்ட ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்தமாலை (தெலுங்கு லிபியில்) பல வருஷங்களாகவே பிரசாரத்திலுள்ளது. மிகச்சிறந்த பயிண்டுடன் விலை 8 ரூ. ஆசார்யஹ்ருதய வியாக்கியானம் மட்டும் தனியே தமிழ் லிபியிலும் கிடைக்கும். விலை 4—4—0. இவையெல்லாம் பூர்வாசார்ய ஸூக்திப் பதிப்புகள்.

இக்காலத்தவர்களுக்கு மிக வுபயோகமாக அடியேனால் எழுதப்பட்ட எளிய தெளிய வுரைகளோடு கூடிய நாலாயிர திவ்வியப்பிரபந்தங்கள், ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ரங்கள், ஸ்ரீவசநபூஷண ஆசார்யஹ்ருதயாதி ரஹஸ்ய நூல்கள், மற்றும் பலவகை யுபந்யாஸ நூல்கள், ஸத்ஸம்ப்ரதாயார்த்த தத்துவ நூல்கள், வால்மீகி ராமாயண வசனம் முதலிய இதிஹாஸ நூல்கள் நாலாயிர திவ்வியப்ரபந்த மூலம் ......... இவையெல்லாம் நமது க்ரந்தமாலா ஆபீஸில் கிடைக்கும். விரிவான கியாட லாகுகள் தருவித்துப் பார்க்க. தமிழ் தெலுங்கு ஸம்ஸ்க்ருத பாஷைகளில் மாதாந்தப் பத்ரிகைகள் பல வருஷங்களாகவே வெளிவந்து கொண்டிருக்கின்றன.

இங்ஙனம்:

— ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம்

**அண்ணங்கராசார்யர்.**

|| श्रीरस्तु ||

# ஸ்ரீ தேசிக ஸ்தோத்ர மாலா

## (இரண்டாவது மலர்)

(ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்.)

## — முன்னுரை —

श्रीमान्वेङ्कटनाथार्यः कवितार्किककेसरी ।
वेदान्ताचार्यवर्यो मे सन्निधत्तां सदा हृदि ॥

மனோவாக்காயங்கள் என்ற மூன்று உறுப்புகளினாலும் நாம் கிஞ்சித்கரிக்க ப்ராப்தியுடையோம். மாநஸிகமான கிஞ்சித்காரமாவது பகவத் பாகவத குணங்களைச் சிந்தை செய்வதேயாம். வாசிகமான கிஞ்சித்காரமாவது வாய்விட்டுத் துதிப்பதேயாம். காயிகமான கிஞ்சித்காரமாவது "ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டு நாம்" என்று ஆழ்வார் பாரித்தபடியே அர்ச்சாவதாரங்களில் அத்தாணிச் சேவகஞ் செய்வதாம். இவற்றுள் மாநஸிகமும் காயிகமும் அவரவர்கள் தாங்கள் உஜ்ஜீவித்துப் போவதற்கு உறுப்பாகுமேயல்லது பிறரும் உய்வுபெறப் பாங்காகாது. வாசிகமான கைங்கர்யங்கள் விளைந்தால் அவற்றால் தாம்தாம் வாழ்வதோடு பிறரும் வாழ ப்ராப்தமாகும். ஏடுபடுத்திவைக்கப்பட்ட வாசிக ஸ்தோத்ரங்களானவை எக்காலத்திலும் விளங்கி எவ்வுயிர்க்கும் அநுஸந்தேயமாகி சாச்வதமான உஜ்ஜீவனோபாயமாகின்றனவென்பது புநருக்தம்.

ஆகவே பரம காருணிகர்களான நம் பூர்வாசாரியர்கள் தாங்கள் வாசிககிஞ்சித்காரமாக வெளியிட்டருளின ஸ்தோத்ரங்களை, பின்னானாரும் உஜ்ஜீவிக்கவேணுமென்கிற விசாலமான நோக்கத்துடனே ஏடுபடுத்திவைத்து உலகத்தை வாழ்விக்கலானார்கள். காளிதாஸபவபூதிப்ரப்ருதிகளான மஹாகவிகள் தங்களுக்கமைந்த வாக்சாதுர்யத்தை பகவத்விஷயக ஸ்தோத்ரரசனையில் செலுத்தாது காவ்ய நாடகாதி நிர்மாணங்களிலேயே பெரும்பாலும் செலுத்திப் போந்தார்கள். அங்ஙனன்றிக்கே நமது பூருவாசாரியர்கள் அமுதினுமாற்றவினிய தங்கள் திருவாக்குக்களை பகவத் ஸ்தோத்திரத்திலும் பரமாசார்ய ஸ்தோத்திரத்திலும் பெருகவிட்டருளினார்கள். அவை சாச்வதமான லோகோபகாரமாக விளங்கி இன்றைக்கும் என்றைக்கும் எம்போலியரும் அநுஸந்தித்து இன்புறவும் உய்வுபெறவும் உறுப்பாயிருக்கின்றன.

முதன் முதலாக ஆளவந்தார்தாம் ஸ்தோத்ர ரத்னமியற்றியருளி இந்தப் பத்ததியை ஸ்தாபித்தருளிய மஹாநுபாவர். பிறகு எம்பெருமானார் கூரத்தாழ்வான் பட்டர் தேசிகன் முதலான ஆசார்யர்கள் அவ்வழியைப் பின்பற்றித் தேனும் பாலுமமுதுமாய பல பல ஸ்தோத்ரங்களையருளிச் செய்துவைத்தார்கள். அவர்களுள் ஸ்ரீமந்நிகமாந்த மஹா தேசிகன் கரைபுரண்ட கருணையாலே பலபல ஸ்தோத்ரங்களைப் பணித்தருளினார். உபநிஷத்துக்கள் ப்ரஹ்ம

ஸூத்ர தத்பாஷ்யங்கள் இதிஹாஸ புராணங்கள் ஆழ்வாரருளிச் செயல்கள் ஆகிய இவற்றில் பலகால் பரிசயம்பண்ணிப் பரிச்ரமப்பட்டு நாம் அறிந்துகொள்ளவேண்டிய ஆழ்பொருள்களையுள்ளடக்கியே பெரும்பாலுமிந்த ஸ்துதி நூல்கள் திருவவதரித்திருப்பதனால் இவற்றை அர்த்தத்தோடு அறிந்துகொள்வார்க்கு ச்ருதீதிஹாஸ புராண திவ்யப்ரபந்தாதிகளிலுள்ள அர்த்த விசேஷங்களனைத்தும் எளிதிலுணரப்பட்டனவாகுமாதலால் இவை அநவரதம் அநுஸந்தேயங்களாகும். உள்ளுறையும் பொருளையுணராது கேவலம் சப்தமாத்ரத்தையே சொன்னாலுங்கூட எம்பெருமானது திருவுள்ளம் உகப்படையுமென்பதில் ஐயமில்லை. ஆனாலும் அர்த்தஜ்ஞானத்தாலே அபரிமிதமான ஆத்மானந்தம் விளையுமாதலால் இந்த ஸ்துதிகளையெல்லாம் அர்த்தத்தோடும் உணர விரும்புவர் பக்தர்கள்.

மிக்க விரிவும் மிக்க சுருக்கமுமின்றிக்கே இவற்றுக்கெல்லாம் ஓர் உரை இயற்றவேணுமென்று பல பெரியார்கள் நியமித்தருளினதை சிரஸாவஹித்து, பண்டிதர்கட்கும் பாமரர்கட்கும் ஒருங்கே உதவுமாறு ஓர் உரை எழுதத் தொடங்கி, ஹயக்ரீவஸ்தோத்ரம், பரமார்த்த ஸ்துதி, வைராக்யபஞ்சகம், கோதாஸ்துதி, தேசிகமங்களம் இவற்றுக்கு வியாக்கியானமெழுதி முதல் மலராக வெளியிட்டேன் முன்பு; இப்போது, ந்யாஸதசக பகவத்தியாநஸோபாநாதிகளுக்கு எளிய தெளிவுரை இரண்டாம்மலராக வெளியிடப்படுகின்றது. "विद्योदन्वति वेङ्कटेश्वरकवौ" [வித்யோதந்வதி வேங்கடேச்வரகவௌ] என்று ஸ்வாமி தாமே அருளிச் செய்தபடி கல்விக் கடலாகிய நம் தேசிகசிகாமணியின் திவ்ய ஸூக்திகளுக்கு நீசனேன் நிறையொன்றுமிலேன் உரையெழுதப் புகுவது ஏலாதாயினும் "அவரவர் தாந்தாமறிந்தவாறு" என்று பொய்கையாழ்வார் பணித்த கணக்கிலே நம் அல்பபுத்திக் கெட்டினவளவு வரையக் குறையில்லையென்று ஸாஹஸமாகவே இப்பணியில் தலையிடலாயிற்று நெடுநாளாகவே.

கடலினுள்ளே புகப்புக நவரத்னங்கள் கிடைக்குமாபோல, தேசிக ஸ்ரீஸூக்திகளிலும் உட்புகுந்து ஆராய ஆராய, அற்புதமான பலபல விசேஷார்த்தங்கள் தோன்றும். யாதவாப்யுதயத்தில் முதல் ஸர்க்கத்தில் ஒன்பதாவது ச்லோகத்தின் வியாக்கியானத்தில் *इत्थं विचिन्त्यास्सर्वत्र भावास्सन्ति पदेपदे । कवितार्किकसिंहस्य काव्येषु ललितेष्वपि* என்று அப்பயதீக்ஷிதர் பணித்தபடியே விசேஷார்த்த ரத்நநிதியன்றோ தேசிக திவ்யஸூக்திகள். அத்தகைய பொருள்களையும் பெரும்பாலும் எழுதுவோமிதில்.

"वक्त्रे तस्य सरस्वती बहुमुखी भक्तिः परा मानसे
शुद्धिः काऽपि तनौ दिशासु दशसु ख्यातिः शुभा जृम्भते"

என்று தசாவதார ஸ்தோத்ரமொன்றுக்கு ஸ்வாமி ஸாதித்தருளின பலன் ஸகலஸ்தோத்ர ஸாதாரணமேயாதலால் அப்படிப்பட்ட பலன்களைப் பாங்காகப் பயக்க வல்லவையான இந்த ஸ்துதிகள் ஸர்வதா ஸர்வோபஜீவ்யங்களாகக் கடவன. இவ்வுரைகளிற் காணும் குற்றங்களைப் பெரியார்கள் இயற்கையின்னருளாற் பொறுத்தருளி குணலேசமுண்டாகில் உகந்தருள்வது.

இங்ஙனம்,
ஸ்ரீவைஷ்ணவதாஸன்,
ஸ்ரீகாஞ்சீ. ப்ர. அண்ணங்கரார்ய தாஸன்.

ஸ்ரீ:

ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: கவிதார்க்கிக கேஸரீ.
வேதாந்தாசார்யவர்யோ மே ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி.

## ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகனருளிச்செய்த

# ந்யாஸ தசகம்

# श्रीदेशिकस्तुतिषु न्यासदशकम् ।

(ந்யாஸப்ரதீபிகையென்னு முரையுடன் கூடியது.)

---

## உரை அவதாரிகை

ஸகல சாஸ்த்ரார்த்த தத்துவங்களையும் கரதலாமலகமாகக் கண்டருளின ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகன் ப்ரபத்தி சாஸ்த்ரார்த்தங்களை ந்யாஸதசகம், ந்யாஸதிலகம், ந்யாஸவிம்சதி என்னும் மூன்று திவ்யக்ரந்தங்களாலே வெளியிட்டருளத் திருவுள்ளம்பற்றி முந்துறமுன்னம் ந்யாஸதசகமருளிச் செய்கிறார். இதில் முதல் ச்லோகமொன்றுமட்டும் பரோபதேச ப்ரக்ரியையில் அவதரிக்கிறது. மற்ற ச்லோகங்களெல்லாம் ப்ரபத்தியைத் தாம் ப்ரயோகிக்கிற முறையிலே [அதாவது ஸ்வாநுஷ்டாந ப்ரக்ரியையில்] அருளிச் செய்யப்படுகின்றன. இந்த ஸ்தோத்ரம் தேவப்பெருமாள் விஷயமானதென்பது ச்லோகங்களில் வ்யக்தம். ... ... *

अहं मद्रक्षणभरो मद्रक्षणफलं तथा ।
न मम श्रीपतेरेवेत्यात्मानं निक्षिपेद्बुधः ॥ १ ॥

அஹம் மத்ரக்ஷணபரோ மத்ரக்ஷணபலம் ததா
ந மம ஸ்ரீபதேரேவேதி ஆத்மாநம் நிக்ஷிபேத் புத:.

(க)

| | |
|---|---|
| புத: | ஸ்வஸ்வரூபத்தை நன்கு உணர்ந்த விவேகியான அதிகாரியானவன், |
| ஆத்மாநம் நிக்ஷிபேத் | ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணக்கடவன்; (எவ்விதமாக அநுஸந்தித்துக் கொண்டு பண்ணக்கடவனென்னில்;) |
| அஹம் ந மம | நான் எனக்கு உரியேனல்லேன்; |
| மத்ரக்ஷணபர: ந மம | என்னை ரக்ஷித்துக்கொள்ளும் பாரமும் எனக்கு உரித்தன்று; |
| ததா மத்ரக்ஷணபலம் ந மம | நான் ரக்ஷணம் பெறுவதனால் விளையும் பேறுதானும் என்னுடையதன்று; |
| ஸ்ரீபதே: ஏவ | இவையெல்லாம் திருமாலுடையனவே; |
| இதி | என்று அநுஸந்தானம் செய்துகொண்டு |

[ஆத்மாநம் நிக்ஷிபேத் என்று அந்வயிப்பது.]

* * * ஆத்மஸமர்ப்பணம் பண்ணும்போது 'நாமார்? ஸர்வஸ்வாமிக்கு ஸமர்ப்பிக்க நமக்கென்று ஒரு பொருளுண்டோ? ஆழ்வாரும் * எனதாவி தந்தொழிந்தே னினி மீள்வதென்பதுண்டே * என்றருளிச்செய்து உடனே * எனதாவியார்யானார்

தந்தனை கொண்டாக்கினையே * என்றருளிச் செய்தாரன்றோ? * உதவிக் கைம்மாறு என்னுயிரென்னவுற்றெண்ணில், அதுவுமற்றங்கவன் தன்னது—எதுவுமொன்றுமில்லை செய்வது இங்குமங்கே * என்றுமருளிச்செய்தாரே; அப்படியருளிச்செய்தவர்தாமே *தோள்களையாரத்தழுவி யென்னுயிரை அறவிலை செய்தனன் சோதீ!* என்றுமருளிச்செய்து வைத்தாராதலால் நிர்வேதத்துடன் ஆத்மஸமர்ப்பணம் பண்ணவும் ப்ராப்தம்' என்று கொண்டு "நானும் எனக்குரியேனல்லேன்; என்னை ரக்ஷித்துக்கொள்ளும் பொறுப்பும் எனக்கில்லை; என்னுடைய ரக்ஷணத்தினாலாகும் பயனும் ஸ்வாமியான அவனுடையதேயன்றி என்னுடையதன்று" என்று உள்ளபடியநுஸந்தித்துக்கொண்டு விவேகியானவன் ஆத்மநிக்ஷேபம் பண்ணக்கடவனென்றதாயிற்று. .... .... ... (௧)

न्यस्याम्यकिञ्चनः श्रीमन्ननुकूलोऽन्यवर्जितः ।
विश्वासप्रार्थनापूर्वमात्मरक्षाभरं त्वयि ॥ २ ॥

**ந்யஸ்யாம்யகிஞ்சந: ஸ்ரீமந்! அநுகூலோந்யவர்ஜித:,**
**விச்வாஸப்ரார்த்தநாபூர்வம் ஆத்மரக்ஷாபரம் த்வயி.** (௨)

| | | | |
|---|---|---|---|
| ஹே ஸ்ரீமந்! | வாரீர் திருமாலே! | விச்வாஸ ப்ரார்த்தநா பூர்வம் | தேவரீர் ரக்ஷித்தருளுமென்கிற விச்வாஸத்தோடும், தேவரீர் அடியேனை ரக்ஷித்தருள வேணுமென்கிற ப்ரார்த்தனையோடுங்கூட |
| அகிஞ்சந: | ஒருவகையான கைம்முதலுமில்லாத அடியேன் | | |
| அநுகூல: | ஆநுகூல்ய ஸங்கல்பத்தோடு கூடினவனும் | | |
| அந்யவர்ஜித: | ஆநுகூல்யத்திற்கு எதிரான ப்ராதிகூல்யத்தின் ஸம்பந்த கந்தமுமில்லாதவனுமாகி | த்வயி | தேவரீரிடத்தில் |
| | | ஆத்மரக்ஷாபரம் ந்யஸ்யாமி | ஸ்வரக்ஷண பாரத்தை ஸமர்ப்பிக்கின்றேன். |

* * * ஆத்மஸமர்ப்பணம் பண்ணும்போது விச்வாஸமும் ப்ரார்த்தனையும் அதில் சொருகியிருக்கவேணும். விச்வாஸமாவது நம்பிக்கை; ஸ்வாமியாகையாலே ஸ்வவஸ்துரக்ஷணத்தை ஸ்வயமேவ செய்துதலைக்கட்டியே தீருவன் என்கிற நம்பிக்கை. இதுதான் மஹாவிச்வாஸமெனப்படும். ப்ரார்த்தனையாவது * த்வமேவோபாயபூதோ மே பவேதி ப்ரார்த்தநாமதி:, சரணாகதிரித்யுக்தா * என்கிறபடியே 'ஸ்வாமிந்! தேவரீரே உபாயபூதராகவேணும்' என்கிற ப்ரார்த்தனை. மாநஸிகமான இந்த ப்ரார்த்தனைதான் சரணாகதியென்று பகவச்சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கையாலே "**ப்ரார்த்தநாபூர்வம்**" என்று ப்ரார்த்தனையை வேறுபடுத்திச் சொன்னதெங்ஙனேயென்று நினைக்கலாகாது. ஆத்மநிக்ஷேபத்தை வாசிகமாகவோ காயிகமாகவோ செய்யுமிடத்து விச்வாஸப்ரார்த்தனைகள் முற்பட்டிருக்கும்படியை யருளிச்செய்ததத்தனை. * நோற்றநோன்பிலேன் நுண்ணறிவிலேன் * என்றும், * ந தர்மநிஷ்டோஸ்மி ந சாத்மவேதீ * என்றும் சொல்லுகிறபடியே ஆகிஞ்சந்யத்தையுடையனும் ஆநுகூல்யஸங்கல்பயுக்தனும் ப்ராதிகூல்ய வர்ஜிதனும் ஆத்மநிக்ஷேபம் செய்யாநின்றேனென்றதாயிற்று. .... (௨)

स्वामिन्! स्वशेषं स्ववशं स्वभरत्वेन निर्भरम् ।
स्वदत्तस्वधिया स्वार्थं स्वस्मिन्न्यस्यसि मां स्वयम् ॥ ३ ॥

**ஸ்வாமிந் ஸ்வசேஷம் ஸ்வவசம் ஸ்வபரத்வேந நிர்ப்பரம்.**
**ஸ்வதத்தஸ்வதியா ஸ்வார்த்தம் ஸ்வஸ்மிந் ந்யஸ்யஸி மாம் ஸ்வயம்.** (௩

| | | | |
|---|---|---|---|
| ஸ்வாமிந் ! | ஸர்வஸ்வாமியான திருமாலே ! | ஸ்வ தத்த ஸ்வ தியா | தேவரீரே தந்தருளின தேவரீர் விஷயமான புத்தியினாலே |
| ஸ்வ சேஷம் | தேவரீருக்கே சேஷப்பட்டவனும் | ஸ்வார்த்தம் | தேவரீருக்கே பேறாகும்படி |
| ஸ்வ வசம் | தேவரீருக்கே வசப்பட்டவனும் | ஸ்வயம் | தேவரீர் தாமே |
| ஸ்வ பரத்வேந நிர்ப்பரம் மாம் | தேவரீருக்கே பாரமாய்க் கொண்டு அதனால் விசாரமற்றவனுமான அடியேனை | ஸ்வஸ்மிந் ந்யஸ்யஸி | தேவரீரிடத்திலே ஆத்ம நிக்ஷேபத்தைச் செய்து கொள்ளா நின்றீர். |

* * * இத்தால் முதல் ச்லோகம் நன்கு வியாக்கியானிக்கப் பட்டதாயிற்று. இரண்டாம் ச்லோகத்தில் “அகிஞ்சந: அஹம் ந்யஸ்யாமி” என்றருளிச் செய்ததைக்கண்டு சிலர் கலங்காமைக்காக இந்த ச்லோகத்தினால் நல்ல தெளிவு பிறப்பிக்கப் பட்டதாயிற்று. திருவாய்மொழியில் * என்னுணர்வினுள்ளே யிருத்தினேன் * என்ற ரீதியில் முந்தின ச்லோகமவதரித்தது; * அதுவுமவனதின்னருளே * என்ற ரீதியில் இந்த ச்லோகமவதரித்தது.

இதில் ‘ஸ்வாமிந்’ என்கிற ஸ்தானத்திலே ‘ஸ்வாமீ’ என்றும் ‘ந்யஸ்யஸி’ என்கிற ஸ்தானத்திலே ‘ந்யஸ்யதி’ என்றும் பாடபேதமுண்டு. ... ... (௩)

श्रीमन्नभीष्टवरद त्वामस्मि शरणं गतः ।
एतद्देहावसाने मां त्वत्पादं प्रापय स्वयम् ॥ ४ ॥

**ஸ்ரீமந்! அபீஷ்டவரத! த்வாமஸ்மி சரணம் கத:,**
**ஏதத் தேஹாவஸாநே மாம் த்வத்பாதம் ப்ராபய ஸ்வயம்.** (௪)

| | | | |
|---|---|---|---|
| அபீஷ்டவரத ஸ்ரீமந் ! | வேண்டுவார் வேண்டின வரங்களைக் கொடுத்தருளும் திருமாலே ! | ஏதத் தேஹ அவஸாநே | வர்த்தமான தேஹம் முடிந்தவுடனே |
| த்வாம் சரணம் கத: அஸ்மி | தேவரீரைத் தஞ்சமாகப் பற்றினவனாகிறேன் ; | ஸ்வயம் | தாமாகவே |
| மாம் | இங்ஙனம் வந்தடைந்த வடியேனை | த்வத்பாதம் ப்ராபய | தேவரீருடைய திருவடிவாரத்தில் சேர்த்துக் கொள்ளவேணும். |

* * * * மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான் * என்ற ஆழ்வார் ஸ்ரீஸூக்தியின்படி ப்ரபந்நாதிகாரிக்கு வர்த்தமாந தேஹாவஸாநத்தில் மோக்ஷமென்கிற சாஸ்த்ரார்த்தம் இந்த ச்லோகத்தில் ஸூசிதமாயிற்று. திருக்கச்சிநம்பிகளாறு வார்த்தைகளில் இதுவுமொன்றென்பது ப்ரஸித்தம். ... ... (4)

त्वच्छेषत्वे स्थिरधियं त्वत्प्राप्त्येकप्रयोजनम् ।
निषिद्धकाम्यरहितं कुरु मां नित्यकिङ्करम् ॥ ५ ॥

**த்வச்சேஷத்வே ஸ்திரதியம் த்வத்ப்ராப்த்யேகப்ரயோஜநம்,**
**நிஷித்தகாம்யரஹிதம் குரு மாம் நித்யகிங்கரம்.** (௫)

(ஸ்ரீமந் !) — திருமாலே!

த்வத் சேஷத்வே ஸ்திரதியம் — தேவரீருக்கே சேஷப்பட்டிருக்கும் விஷயத்தில் திண்ணிய அத்யவஸாயம் கொண்டவனும்

த்வத் ப்ராப்தி ஏக ப்ரயோஜநம் மாம் — தேவரீரை யநுபவிப்பது தேவரீருக்குக் கைங்கரியம் செய்வது ஆகிய விவற்றையே பரமப்ரயோஜநமாகக் கொண்டவனுமான அடியேனை

நிஷித்த காம்ய ரஹிதம் நித்யகிங்கரம் குரு — சாஸ்த்ர நிஷித்தங்களான கருமங்களிலும், அகரணே ப்ரத்யவாய ஜநகமல்லாத காம்ய கருமங்களிலும் பற்றற்ற நித்ய கைங்கர்ய நிரதனைச் செய்து கொண்டருளவேணும்.

* * * "பாஷாணகல்பதைவ முக்தி:" என்றும் "ஆத்யந்திக துःக்கத்வம்ஸ ஏவ முக்தி:" என்றும் சொல்லுவார் திரளிலே சேராமல் * ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்யுமதே முக்தியென்கிற ஸதாசார்யஸம்ப்ரதாயத்திலே படிந்தவர்கள் பரமபுருஷார்த்தமான அந்த கைங்கர்யத்தைப் பிரார்த்திக்க வேண்டுவது சைதந்யகார்யமாய் ஸ்வரூபாநுபந்தியாய் அவர்ஜநீயமாகையாலே அந்த கைங்கர்ய ப்ரார்த்தநையை இந்த ச்லோகத்தினல் செய்துபோருகிறார். [**த்வச்சேஷத்வே ஸ்திரதியம்**] * களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன் * என்று திண்ணிதான அத்யவஸாயமுடைமையைச் சொன்னபடி. [**த்வத்ப்ராப்த்யேகப்ரயோஜநம்**] கெடுமரக்கலம் கரைசேர்ந்தாப்போலே பிறவிக்கடலுள் நின்று துளங்குமவனுக்கு பரமப்ராப்யனைப்ராபிக்கையொழிய வேறுப்ரயோஜனமில்லாமையாலே இதை நன்கு உணர்ந்தவனடியேன் என்றாராயிற்று. [**நிஷித்தகாம்யரஹிதம்**] * क्रियमाणं न कस्मैचिद्यदर्थाय प्रकल्पते। अक्रियावदनर्थाय तत्तु कर्म समाचरेत्—க்ரியமாணம் ந கஸ்மைசித் யத் அர்த்தாய ப்ரகல்பதே, அக்ரியாவதநர்த்தாய தத் து கர்ம ஸமாசரேத் * என்கிற பகவச்சாஸ்த்ரப்ரமாண வசனத்தை ஸ்வாமி தாமே ரஹஸ்யக்ரந்தங்களில் கையாளுகிறார். எந்த கருமம் செய்யப்பட்டால் அதற்கு ஒரு பலனும் கிடைக்காதோ, எந்த கருமம் செய்யப்படாவிடில் ப்ரத்யவாயமுண்டாகுமோ அந்த கருமந்தான் ப்ரபந்ந பரமைகாந்திக்குக் கர்த்தவ்யமென்று இந்த ப்ரமாணம் தெரிவிக்கின்றது. ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்தில் சரமச்லோகாதிகாரத்தில் "**மாசு:**" என்பதன் விவரணத்தில் அருளிச் செய்துள்ள ஸ்ரீஸூக்திகளிவை:— இப்படி க்ருதக்ருத்யனான இவனுக்கு * தத் து கர்ம ஸமாசரேத் * என்று விஹிதமான கர்த்தவ்யாந்தரம் கைங்கர்யாநுப்ரவிஷ்ட ஸதாசார விசேஷமென்னுமிடம் பூர்வாபரக்ரந்தங்களாலும், இச்ச்லோகந்தன்னில் * **அக்ரியாவதநர்த்தாய** * என்கையாலும் ஸித்தம். ஆகையால் மேல் பலஸித்தியில் ஸம்சயமில்லாமையாலும், மோக்ஷோபாயமாகவொரு கர்த்தவ்ய சேஷமில்லாமையாலும், இவனுக்குள்ள கர்த்தவ்யம் ஆஜ்ஞாநுபாலநரூபமான ஸ்வயம்ப்ரயோஜநமாகையாலும், அபராதம் ப்ரஸக்தமானல் அதிகாராந்தரத்திற் சொன்ன கட்டளையிலே அநுதாபாதிகளாலே ஸுபரிஹரமாகையாலும் இவன் த்ருஷ்டமநாவாகக் குறையில்லை." இத்யாதி. ஆகவே நிஷித்தகருமங்களும் காம்யகருமங்களும் ப்ரபந்நாதிகாரிகளுக்கு மிக்க குறிக்கோளுடன் விலக்கப்படவேண்டும். அது தோன்ற "நிஷித்தகாம்யரஹிதம்" என்றாரிங்கு. "நிஷித்தகாம்யரஹிதம் மாம் நித்யகிங்கரம் குரு" என்று அந்வயிக்கவுமாம். "மாம் நிஷித்தகாம்ய ரஹிதம் நித்யகிங்கரம் குரு" எனவுமாம். (ரு)

देवीभूषणहेत्यादिजुष्टस्य भगवंस्तव ।
नित्यं निरपराधेषु कैङ्कर्येषु नियुङ्क्ष्व माम् ॥ ६ ॥

**தேவீபூஷண ஹேத்யாதிஜுஷ்டஸ்ய பகவந்! தவ,**
**நித்யம் நிரபராதேஷு கைங்கர்யேஷு நியுங்க்ஷ்வ மாம்.** (௬)

| | | | |
|---|---|---|---|
| ஹே பகவந்! | ஷாட்குண்ய பரிபூர்ணரான திருமாலே! | நிரபராதேஷு கைங்கர்யேஷு | அபராத ப்ரஸக்தியற்ற கைங்கரியங்களிலே |
| மாம் | திருவடி பணிந்தவடியேனை | நித்யம் நியுங்க்ஷ்வ | இங்கும் அங்கும் ஏவியருள வேணும். |
| தேவீ பூஷண ஹேதி ஆதி ஜுஷ்டஸ்ய தவ | பிராட்டிமார்கள், திவ்ய பூஷணங்கள், திவ்யாயுதங்கள் முதலானவற்றோடுங் கூடிய தேவரீருக்கு | | |

* * * திருமடந்தை மண்மடந்தையிருபாலும் திகழவும், * செங்கமலக்கழலில் சிற்றிதழ்போல் விரலில் சேர்திகழாழிகளுங் கிண்கிணியும் அரையில்தங்கிய பொன்வடமும் தாளநன்மாதுளையின் பூவொடுபொன்மணியும் மோதிரமும் கிறியும் மங்கலவைம்படையும் தோள்வளையுங்குழையும் மகரமும் வாளிகளும் சுட்டியுமொத்திலகவும், * சங்கொடுசக்கரம்வில் ஒள்வாள் தண்டு முதலிய திவ்யாயுதங்களோடு திகழவும் பெற்ற பேரோலக்கத்திலே அடிமை செய்யப் பாரித்திருக்கும்படியை இந்த ச்லோகத்தினுல் வெளியிட்டருளினாராயிற்று. "**நிரபராதேஷு கைங்கர்யேஷு**" என்ற இவ்விடத்திலே—ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்தில் "இப்படி பகவச் சேஷதைகஸ்வபாவனைகையாலே சாஸ்த்ரநியத தத்கைங்கர்யைகரஸனை இவ்வதிகாரிக்குப் பின்பு அநாபத்தில்புத்திபூர்வகமான அபராதம் வருகை,பற்றின கைங்கர்யைகநிஷ்டைக்கு விருத்தமாகையாலே" என்று தொடங்கி ரஸகனமாகவருளிச் செய்யப்பட்டுள்ள அபராதபரிஹாராதிகார ஸ்ரீஸூக்திவிசேஷங்கள் அநுஸந்தேயங்களாம். வத்ஸலனை எம்பெருமானை தோஷாதர்சியாகவும் தோஷபோக்யனுகவும் காணுமளவால் அபராதங்களிலே தகணேறி நிற்பது தகாதென்று சாஸ்த்ரார்த்தம் காட்டினபடி. "**கைங்கர்யேஷு நியுங்க்ஷ்வ**" என்றது * ஏவமற்றமரராட் செய்வார் * என்றும் *முகப்பே கூவிப்பணிகொள்ளாய்* என்றுமுள்ள அருளிச்செயல்களையும் * ஸ்வயம் து ருசிரே தேசே க்ரியதாமிதி மாம் வத * என்கிற இளையபெருமாள் ப்ரார்த்தனையையுமடியொற்றியருளிச் செய்தது. ... ... ... (௬)

मां मदीयं च निखिलं चेतनाचेतनात्मकम् ।
स्वकैङ्कर्योपकरणं वरद स्वीकुरु स्वयम् ॥ ७ ॥

**மாம் மதீயஞ்ச நிகிலம் சேதநாசேதநாத்மகம்,**
**ஸ்வகைங்கர்யோபகரணம் வரத ஸ்வீகுரு ஸ்வயம்.** (௭)

| | | | |
|---|---|---|---|
| ஹே வரத | வாரீர் பேரருளாளப் பெருமானே! | ஸ்வ கைங்கர்ய உபகரணம் | தேவரீருடைய கைங்கரியத்திற்கு உபயுக்தமாக |
| மாம் | அடியேனையும் | ஸ்வயம் ஸ்வீகுரு | தாமாகவே ஸ்வீகரித்தருள வேணும். |
| சேதந அசேதநாத்மகம்மதீயம் நிகிலம்ச | சேதனங்களும் அசேதனங்களுமான என்னுடைமைகளையுமெல்லாம் | | |

*** என்னையுமென்னுடைமையையும் உன் சக்கரப்பொறியொற்றிக்கொண்டு* என்கிற பெரியாழ்வார் பாசுரத்தையுட்கொண்டு அருளிச்செய்தது இந்தச்லோகம். நாம் செய்கிற கைங்கரியத்திற்கு ப்ரதிஸம்பந்தி எம்பெருமானொருவனேயன்றிக்கே தத்ஸம்பந்தி ஸம்பந்திகளுமாகிறப்போலே, நம்மோடு ஸாக்ஷாத் பரம்பரயாச ஸம்பந்தம் பெற்ற சேதநாசேதநப்பொருள்களெல்லாம்பரமசேஷியானவவனுடைய

கைங்கர்யத்திலே உபயுக்தமாக வேணுமென்று விரும்புகை ப்ராப்தமாகையாலே அந்த விருப்பம் வெளியிடப்பட்டதாயிற்று இதில். நம்முடைய சரீரத்திலுள்ள ஸகலாவயவங்களும் உள்ளுறையுமாத்மாவுக்குக் கைங்கர்யோபகரணமாகிறபடியைக் காணநின்றோமிறே; இங்ஙனமே அந்த ஆத்மாவும் ஆத்மீயங்களுமெல்லாம் பரமசேதநனுக்குக் கைங்கர்யம்பண்ணக் கடமைப்பட்டவையென்பதுணர்க. (எ)

स्वदेकरक्ष्यस्य मम त्वमेव करुणाकर ।
न प्रवर्तय पापानि प्रवृत्तानि निवर्तय ॥ ८ ॥

த்வதேக ரக்ஷ்யஸ்ய மம த்வமேவ கருணாகர !
ந ப்ரவர்த்தய பாபாநி ப்ரவ்ருத்தாநி நிவர்த்தய. (அ)

| | | | |
|---|---|---|---|
| ஹே கருணாகர ! | வாரீர் பேரருளாளப் பெருமாளே ! | பாபாநி ந ப்ரவர்த்தய | பாபப்ரவ்ருத்தி யுண்டாகாதபடி செய்தருளவேணும் ; |
| த்வத் ஏக ரக்ஷ்யஸ்ய மம | தேவரீரொருவர்க்கே ரக்ஷணீயனான அடியேனுக்கு | ப்ரவ்ருத்தாநி நிவர்த்தய | நேர்ந்த பாவங்களைப் பலன் கொடுக்கமாட்டாதபடி செய்தருளவேணும். |
| த்வம் ஏவ | தேவரீர் தாமாகவே | | |

***பாபங்கள் புகாதபடிக்கும், புகுந்தபாபங்கள் பலன்கொடுக்க சக்தமாகாதபடிக்கும் தேவரீரே செய்தருள வேண்டுமென்று ப்ரார்த்தித்தாராயிற்று. "ப்ரவ்ருத்தாநி பாபாநி நிவர்த்தய" என்று வேண்டினது உசிதம்; "பாபாநி ந ப்ரவர்த்தய" என்று வேண்டலாமோ? * பாவமே செய்து பாவியானேன் * நானே நானாவித நரகம் புகும் பாவஞ் செய்தேன் * என்றன்றோ ஞானிகள் அநுஸந்திப்பது. பாபங்களைச் செய்து போருவது நாமேயாயிருக்க 'நீ பாவங்களைச் செய்விக்காதே' என்று கோருவதற்கு ப்ரஸக்தியுண்டோ? என்று சங்கிக்க நேரும். இதற்குப் பல படிகளிலே பரிஹாரமுண்டு; "एष एव असाधु कर्म कारयति यम् अधो निनीषति" என்னு முபநிஷத் ப்ரமாணத்தைக் கொண்டு இங்ஙனே சொல்லக் குறையில்லை. ப்ரஹ்மஸூத்ரம் * कर्ता शास्त्रार्थवत्त्वात् * என்று சொல்லி வைத்திருந்தும் அடுத்தபடியாக * परात्तु तत् श्रुतेः * என்றும் சொல்லிவைத்திருக்கையாலே அநுமந்த்ருத்வத்தை எம்பெருமான் பக்கலிலே இசைந்துதீர வேண்டிற்றிறே. 'நான் பாப ப்ரவ்ருத்தி பண்ணும் போது பிரானே! நீ அநுமந்தாவாக இராதொழியவேணும்' என்பது இங்கு விவக்ஷிதம். "ந ப்ரவர்த்தய பாபாநி" என்பதற்கு "अहं यथा पापप्रवृत्तो न भवेयम् तथा अनुगृहाण" என்று பொருளாகக் கொள்வது உசிதம். ... ... (அ)

अकृत्यानां च करणं कृत्यानां वर्जनं च मे ।
क्षमस्व निखिलं देव प्रणतार्तिहर प्रभो ॥ ९ ॥

அக்ருத்யாநாஞ்ச கரணம் க்ருத்யாநாம் வர்ஜநஞ்ச மே,
க்ஷமஸ்வ நிகிலம் தேவ ! ப்ரண தார்த்திஹர! ப்ரபோ. (கூ)

| | | | |
|---|---|---|---|
| ப்ரணத ஆர்த்தி ஹர ப்ரபோ ! தேவ ! | அடியார்களின் இடரை நீக்கியருளும் தேவப் பெருமாளே ! | க்ருத்யாநாம் வர்ஜநம் ச | செய்ய வேண்டியவற்றைச் செய்யாதொழிவதுமாகிய |
| அக்ருத்யாநாம் கரணம் | செய்யத் தகாதவற்றைச் செய்வதும் | மே நிகிலம் | எனது குற்றங்களை யெல்லாம் |
| | | க்ஷமஸ்வ | பொறுத்தருள வேணும். |

***இந்த ச்லோகம் கீழ்ச்லோகத்தை ஒருபுடை விவரிக்கின்றதாயிராநின்றது. நம்முடைய பாபங்களானவை அக்ருத்யகரண ரூபமாயும் க்ருத்யாகரண ரூபமாயும் இருவகைப்பட்டிருக்கும். செய்யத் தகாதவையாக சாஸ்திரங்களிலே நிஷேதிக்கப்

பட்டவற்றைச் செய்கை அக்ருத்யகரணமாகும். பரஹிம்ஸை பரஸ்தோத்ரம் பர தார பரிக்ரஹம் பரத்ரவ்யாபஹாரம் அஸத்யகதநம், அபக்ஷ்யபக்ஷணம் தொடக்க மானவை அவை. இனி க்ருத்யாகரணமாவது சாஸ்த்ரங்களிலே கர்த்தவ்யங்களாக விதிக்கப்பட்டுள்ள ஸத்கர்மங்களைச் செய்யாமை. இவை, சாஸ்த்ர விச்வாஸியான ப்ரபந்நனுக்கு புத்தி பூர்வகமாக நேர ப்ரஸக்தியில்லை இருள் தருமா ஞாலத்தி லிருப்பாலே ப்ராமாதிகமாக நேர்ந்ததாகில் * என்னடியாரது செய்யார் செய்தாரேல் நன்று செய்தாரென்பர்போலும் * என்றும் * குன்றனைய குற்றஞ் செய்யினும் குணங்கொள்ளும்* என்று மிப்படிகளிலேயுள்ள பாசுரங்களை நினைத்து அவலிப்த னயிருக்கத் தகாது; இருகரையுமழிக்கும் க்ருபா ப்ரவாஹம் எந்த ஸமயத்திலே எந்த அதிகாரி பக்கலிலே பெருகுமென்பது * ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந * என்ற அவனொருவனுடைய திருவுள்ளத்திற்கன்றி மற்றொருவற்கும் தெரிய விரகில்லாமை யாலே “நம்முடைய அக்ருத்ய கரண க்ருத்யாகரணங்கள் அவனுக்கு உகப்பாம்” என்று நினைத்துச் செருக்குற்றிருக்க அவகாச லேசமுமில்லை; க்ஷமாநிதி பக்கலிலே க்ஷமை கொள்ளவேவேணும். எம்பெருமானர் தாமும் சரணகதி கத்யத்திலே “மநோவாக் காயைஃ” என்று தொடங்கி மூன்று சூர்ணைகளாலே ப்ரார்த்தித்த கட் டளையிலே இங்கும் ப்ரார்த்திக்கிருராயிற்று. ... ... (௯)

श्रीमन्नियतपञ्चाङ्गं मद्रक्षणभरार्पणम् ।
अचीकरस्स्वयं स्वस्मिन्नतोऽहमिह निर्भरः ॥ १० ॥

**ஸ்ரீமந் நியதபஞ்சாங்கம் மத்ரக்ஷணபரார்ப்பணம்,**
**அசீகரஃ ஸ்வயம் ஸ்வஸ்மிந் அதோஹமிஹ நிர்ப்பரஃ.** (௰)

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீமந்! | திருமாலே! | ஸ்வஸ்மிந் அசீகரஃ | தம்மிடத்திலே செய்வித்துக் கொண்டீர்; |
| நியத பஞ்சாங்கம் | ஆநுகூல்யஸங்கல்பம் முதலான ஐந்து அங்கங்களின் நையத்யத்தை யுடைய | அதஃ | ஆகையினாலே |
| | | அஹம் | அடியேன் |
| மத் ரக்ஷண பர அர்ப்பணம் | ஸ்வரக்ஷாபர ஸமர்ப்பணத்தை | இஹ | இந்த ஸ்வரக்ஷண விஷயத்தில் |
| ஸ்வயம் | தாமாகவே | நிர்ப்பரஃ | நிர்விசாரனாயினேன். |

***இந்த நிகமந ச்லோகத்தினால் இந்த ஆத்மநிக்ஷேபமும் தம் தலையாலே வந்த தன்று, அத்தலையே செய்வித்துக் கொண்டதாமத்தனை யென்று கீழே மூன்றாம் ச்லோகத்திலருளிச் செய்ததுதன்னையே திடமாக வருளிச்செய்து இந்த ஸ்துதி யைத் தலைக்கட்டினாராயிற்று. “ஆநுகூல்யஸ்ய ஸங்கல்பஃ ப்ராதிகூல்யஸ்ய வர்ஜ நம், ரக்ஷிஷ்யதீதி விச்வாஸஃ கோப்த்ருத்வ வரணம் ததா; ஆத்ம நிக்ஷேப கார்ப் பண்யே ஷட்விதா சரணகதிஃ” என்கிற வசனத்திலே அங்கபஞ்சகம் கூறப்பட் டுள்ளது காண்க. இதில் ஆறு சொல்லப்பட்டிருந்தாலும் அங்கியானதொன்றை யும் சேர்த்து ஆறாகக் கணக்கிட்டிருப்பதாகக் கூறுவர். ஆத்ம நிக்ஷேபமென்பது அங்கி; மற்ற ஐந்தும் அங்கங்கள். ஆனது பற்றியே * **நியத பஞ்சாங்கம்** * என் றருளிச் செய்தது.

ஒவ்வொரு ஸ்துதியின் முடிவிலும் * வேங்கட நாதேந விரசிதாமேதாம் * இத்யாதி ப்ரகாரேண திருநாமவிந்யாஸம் விளங்கா நிற்க, இதுதன்னிலே அங்ஙன

மொன்றுமில்லாமை இந்த க்ரந்த ரத்நத்தின் இயல்புக்கு மிக விணங்கியதாகும். ஆத்ம நிக்ஷேபத்திற்குப்போலவே தத்ப்ரதிபாதக க்ரந்தத்திற்கும் தாம் கர்த்தா வல்லாமையைக் காட்டி நின்றபடி.

இதில் "ஸ்ரீமந்" என்கிற ஸ்தானத்திலே 'ஸ்ரீமாந்' என்றும், 'அசீகர:' என்கிற ஸ்தானத்திலே 'அசீகரத்' என்றும் பாடபேதமுண்டு. அசீகரத் என்பதும் அசீகர: என்பதும் * காரயதியின் லுங் ரூபம். .... .... (௰)

## ந்யாஸப்ரதீபிகா ஸமாப்தா.

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கர
அண்ணங்கராசாரியர் இயற்றிய
ஸ்ரீமந் நிகமாந்த தேசிக ஸ்தோத்ராவளி யுரையில்
ந்யாஸ தசகவுரை முற்றிற்று.

— அஸ்மத் குருபரம்பராப்யோ நம: —

ஸ்ரீ:

ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகனருளிச்செய்த

# பகவத் த்யாந ஸோபாநம்.

# ॥ भगवद्ध्यानसोपानम् ॥

## ஸ்ரீகாஞ்சீ. அண்ணங்கராசார்யர் இயற்றிய ஸோபாநதீபிகையென்னு முரையுடன் கூடியது

(உரையவதாரிகை.)

தேசிகன் திருவரங்கம் பெரிய கோயிலிலே நித்யவாஸம் செய்தருள விரும்பி அங்கேற எழுந்தருளினபோது அருளிச்செய்த ஸ்தோத்ரங்களுள் தலையானது இது. ஆழ்வாரருளிச்செயல்களில், திருப்பாணாழ்வாரருளிச்செய்த அமலனாதிபிரானை யொத்ததாம் இது. அழகிய மணவாளனுடைய பாதாதி கேசாந்தமான வடிவழகை யநுபவிப்பதில் இவ்விரண்டு திவ்யக்ரந்தங்களுக்கும் ஸாம்யமுள்ளது. "**ஸ்ரீரங்கராஜத்யாந ஸோபாநம்**" என்று திருநாமம் சாத்தாமல் "பகவத் த்யாந ஸோபாநம்" என்று திருநாமம் சாத்தினது பகவச்சப்தவாச்யத்வம் ஸ்ரீரங்கநாதனிடத்திலே யோகரூடமென்னும் திருவுள்ளத்தினாலென்று பெரியார் கூறுவர். ஸோபாநமென்று படிக்குப்பெயர்; பக்தர்களின் சித்தவ்ருத்தியானது ஸ்ரீரங்கநாதனுடைய திருவடிகளினின்று திருமுடியளவும் ஏறுவதற்கு இந்த ஸ்தோத்ரம் படிக்கட்டுபோன்றதென்று சமத்காரசாலியான உக்தி. இதைக்கொண்டு எம்பெருமானுடைய ஸகல அவயவங்களையும் அடைவே அநுபவிப்பது எளிது என்றபடி. *

**अन्तर्ज्योतिः किमपि यमिनामञ्जनं योगदृष्टेश्चिन्तारत्नं सुलभमिह नः सिद्धिमोक्षानुरूपम् ।**
**दीनानाथव्यसनशमनं दैवतं दैवतानां दिव्यं चक्षुः श्रुतिपरिषदां दृश्यते रङ्गमध्ये ॥ १ ॥**

**அந்தர் ஜ்யோதி: கிமபி யமிநாம் அஞ்ஜநம் யோகத்ருஷ்டே:**
**சிந்தாரத்நம் ஸு லபமிஹ நஸ் ஸித்திமோக்ஷாநுரூபம்,**
**தீநாநாதவ்யஸநசமநம் தைவதம் தைவதாநாம்**
**திவ்யம் சக்ஷு: ச்ருதிபரிஷதாம் த்ருச்யதே ரங்கமத்யே.** (௧)

| | |
|---|---|
| யமிநாம் | யோகிகளுக்கு |
| கிமபி | அநிர்வசநீயமாய் |
| அந்த: ஜ்யோதி: | ஹ்ருதய குஹரத்திலே தோன்றும் சோதி போன்றதாய் |
| யோகத்ருஷ்டே: அஞ்ஜநம் | யோகக்கண்ணை நிஷ்கல்மஷமாகச் செய்ய வல்ல ஸித்தாஞ்ஜநம் போன்றதாய், |
| இஹ ந: ஸுலபம் | கண்ணெதிரே நமக்கு எளிதாய் |
| ஸித்தி மோக்ஷ அநுரூபம் சிந்தாரத்நம் | யோக ஸித்தியையோ மோக்ஷத்தையோ வேண்டுவார்க்கு வேண்டினபடி அளிக்கவல்ல சிந்தாமணி போன்றதாய் |
| தீந அநாத வ்யஸந சமநம் | அசக்தர்களும் அநாதர்களுமான நம்போல்வாருடைய விஷயாந்தரப் பற்றாகிற இடரைப் போக்க வல்லதாய் |
| ச்ருதி பரிஷதாம் திவ்யம் சக்ஷு: | வேதராசிகளுக்கு திவ்ய சக்ஷுஸ்ஸு போன்றதாய் |
| தைவதாநாம் தைவதம் | தெய்வங்களெல்லாவற்றுக்கும் மேலான தான தெய்வமொன்று |
| ரங்கமத்யே த்ருச்யதே | ஸ்ரீரங்க விமானத்திடையே ஸேவிக்கப்படுகின்றது. |

*** மேல்ச்லோகத்திலிருந்து திருவடிமுதலான திவ்யாவயவங்களில் ஈடுபட்டுப் பேசப்போகிறவர் முந்துறமுன்னம் அவயவிபக்கலிலே ஈடுபட்டுப் பேசுகிறார்; ஸ்ரீரங்கநாதனென்று ஸ்பஷ்டமாக நிர்தேசியாமல், ஜ்யோதிஸ்ஸென்றும் அஞ்ஜனமென்றும் சிந்தாமணியென்றும் திவ்யசக்ஷுஸ்ஸென்றும் தைவதமென்றும் இங்ஙனே சில சப்தவிசேஷங்களாலே நிர்தேசித்திருப்பது நாநாப்ரமாண புஞ்ஜங்களில் நோக்காகவாயிற்று. *குழுமித் தேவர்குழாங்கள் கைதொழச் சோதி வெள்ளத்தினுள்ளே எழுவதோருரு என்னெஞ்சுள்ளெழும்* என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தையடியொற்றி "யமிநாம் கிமபி அந்தர் ஜ்யோதி:" என்றது. "யோகத்ருஷ்டே: அஞ்ஜநம்" என்றதிலும் 'யமிநாம், கிமபி' என்பவற்றை அநுஷங்கம் செய்துகொள்ளலாம். [யமிநாம் யோகத்ருஷ்டே: கிமபி அஞ்ஜநம்] ஸித்தாஞ்ஜநமணியாத த்ருஷ்டிக்கு அரும்பெரும்பொருள் புலப்படாதன்றே. எம்பெருமானையே ஸித்தாஞ்ஜநமாகச் சொல்லுகிறதிங்கு. வரதராஜபஞ்சாசத்தில் "ஸித்தாஞ்ஜநேந பவதைவ விபூஷிதாக்ஷா:—மாயாநிகூட மநபாயமஹாநிதிம் த்வாம் பச்யந்தி" என்றருளிச்செய்தது இங்கே அநுஸந்தேயம். யோகிகள் யோகம் பண்ணி ஸாக்ஷாத்கரிக்க நினைத்தாலும் எம்பெருமான் தன்னைத் தானே காட்டிக் கொடுத்தாலல்லது காணலாகாதென்பது இங்கு விவக்ஷிதம். ஆனதுபற்றியே எம்பெருமான் தன்னையே ஸித்தாஞ்ஜனமாக வைத்துப் பேசினாராயிற்று. [இஹ ந: ஸுலபம் சிந்தாரத்நம்] ஆழ்வார்கள் எம்பெருமானை 'சிந்தாமணியே!' என்றழைக்கிறார்கள். பட்டர் "ஸ்ரீஸ்தநாபரணம் தேஜ: ஸ்ரீரங்கேசயமாச்ரயே, சிந்தாமணிமிவோத்வாந்தம் உத்ஸங்கே அநந்தபோகிந:" என்றருளிச்செய்தார். சிந்தித்தவளவிலேயே ஸர்வஸ்வத்தையுமளிக்கவல்லதொரு ரத்நவிசேஷம் சிந்தாமணியெனப்படும்; அஃது உலகத்தில் எளிதன்று, அரிதாயிருக்கும். அது இங்கே ஸ்ரீரங்க விமானத்திலே ஸுலபமாயிற்றென்கை.

[**ஸித்திமோக்ஷாநுரூபம்**] ஸித்தியென்பது யோகஸித்தி; இது இவ்விபூதியிலேயே ப்ராப்தமாகக்கூடியது. இதைவிரும்பினால் இதையும், மோக்ஷத்தை விரும்பினால் அதையும் அளிக்கவல்லவனிறே எம்பெருமான். [**தீந அநாத வ்யஸந சமநம்**] அகிஞ்சநர்களாயும் அநந்யகதிகளாயுமிருப்பார்க்கு துக்கசாந்தியைச் செய்விக்க வல்லதென்கை. [**தைவதாநாம் தைவதம்**] *யாங்கடவுளென்றிருக்கு மெவ்வுலகிற் கடவுளர்க்கும் ஆங்கடவுள் நீயென்றால் அஃதுனக்கு வியப்பாமோ?* என்றார் பிள்ளைப்பெருமாள். தெய்வமென்று பேர்பெற்றிருக்குமவர்களுக்கெல்லாம் தலையான தெய்வமென்றபடி. [**ச்ருதிபரிஷதாம் திவ்யம் சக்ஷு:**] வேதராசிகளுக்கெல்லாம் திவ்யமான கண்ணாயிருப்பவனெம்பெருமான். "வேதைச்ச ஸர்வைரஹமேவ வேத்ய:" என்ற கீதாசார்யஸூக்தியை விவரித்தபடி. ஆக இப்படிப்பட்ட வொருபரஞ்சோதியை *யான் கண்டது அணிநீர்த் தென்னரங்கத்தே என்றாராயிற்று. ... ... ... (க)

**वेलातीतश्रुतिपरिमलं वेधसां मौलिसेव्यं प्रादुर्भूतं कनकसरितः सैकते हंसजुष्टे ।**
**लक्ष्मीभूम्योः करसरसिजैर्लालितं रङ्गभर्तुः पादांभोजं प्रतिफलति मे भावनादीर्घिकायाम् ॥ २ ॥**

**வேலாதீதச்ருதிபரிமளம் வேதஸாம் மௌலிஸேவ்யம்**
**ப்ராதுர்ப்பூதம் கநகஸரிதஸ் ஸைகதே ஹம்ஸஜுஷ்டே,**
**லக்ஷ்மீபூம்யோ: கரஸரஸிஜைர் லாலிதம் ரங்கபர்த்து:**
**பாதாம்போஜம் ப்ரதிபலதி மே பாவநாதீர்க்கிகாயாம்.** (உ)

| | |
|---|---|
| வேலாதீத ச்ருதி பரிமலம் | எல்லை கடந்த வேத பரிமளத்தையுடையதும் |
| வேதஸாம் மௌலி ஸேவ்யம் | ப்ரஹ்ம பட்டத்தில் அமருமவர்களுக்கெல்லாம் தலையால் வணங்கத் தக்கதும் |
| ஹம்ஸ ஜுஷ்டே கநகஸரிதஃ ஸைகதே ப்ராதுர்ப்பூதம் | ஹம்ஸ ஸேவிதமான திருக்காவேரியினிடையே தோன்றியுள்ளதும் |
| லக்ஷ்மீ பூம்யோஃ கரஸரஸிஜைஃ லாலிதம் | ஸ்ரீதேவி பூதேவிகளின் திருக்கைத் தாமரைகளால் வருடப்பட்டதுமான |
| ரங்கபர்த்துஃ பாத அம்போஜம் | ஸ்ரீ ரங்கநாதனுடைய திருவடித் தாமரையானது |
| மே பாவநாதீர்க்கிகாயாம் ப்ரதிபலதி | அடியேனுடைய சிந்தனையாகிற வாவியிலே பிரதிபிம்பிக்கின்றது. |

*** நீண்மதிளரங்கத் தம்மானுடைய திருக்கமலபாதம் அநவரதமும் தம்முடைய சிந்தனையிலேயேயிருப்பதாக வருளிச்செய்கிறாரிதில். வேலாதீதச்ருதிபரிமலம் என்பதற்கு (பதவுரையில் எழுதியபடி) பஹுவ்ரீஹியாகக்கொண்டு வேலாதீதமான ச்ருதிபரிமளத்தையுடையது என்றுரைப்பதுதான் பொருத்தம். சிலர் (வேலாதீத) என்பதை ச்ருதிக்கு விசேஷணமாக்கி எல்லைகடந்த வேதங்களின் பரிமள ரூபமாகவுள்ளது திருவடி, என்றுரைப்பர். அநந்தங்களான ச்ருதிகளானவை "सर्वे वेदा यत्पदमामनन्ति—ஸர்வே வேதா யத்பதம் ஆமநந்தி" என்கிறபடியே பகவத்பாதாரவிந்த ப்ரதிபாதநத்தினாலேயே பரிமளம் பெற்றவையாகின்றன. என்பது அதன் கருத்தாமென்பர். * **வேலாதீத ச்ருதிபரிமள** மென்கிறவிது பாதாம்போஜத்திற்கு விசேஷணமாயிருக்கையாலே அம்போஜத்திற்குப் பரிமளமுடைமை சொல்லவேண்டியது முக்கியமாகையாலே முன்னம் சொல்லப்பட்ட பஹுவ்ரீஹியர்த்தமே சிறக்கும். யாதவாப்யுதயத்தில் ஐந்தாவது ஸர்க்கத்தில் (ச்லோ. 95-ல்) "**நித்யாபூர்வ ச்ருதிபரிமளம் பாதாம்போஜம்**" என்றவிடத்தில் தீக்ஷிதர் பஹுவ்ரீஹியாகவே வியாக்கியானம் செய்திருக்கக் காண்கையாலே அதற்குமிணங்கும். 'பரிமளத்தையுடையது' என்று சொல்லுவதிற்காட்டிலும் பரிமளஸ்வரூபமாகவேயுள்ளதென்று சொல்லுவதில் விசேஷமுண்டாகையாலே தத்புருஷனாகக் கொள்வதே சிறக்குமென்கிற வாதம் இவ்விடத்திற்குப் பொருந்தாது. ஏனெனில்; பரிமளசப்தம் நித்யபும்லிங்கமாகையாலே பஹுவ்ரீஹியாகக் கொண்டாலல்லது ப்ரயோகம் பொருந்தாது. பாதாம்போஜமென்கிற கர்த்ருபதம் ப்ரதமாவிபக்த்யந்தமாதலால் பஹுவ்ரீஹிவிவக்ஷையில்லாதபோது "வேலாதீத ச்ருதிபரிமளஃ" என்று விஸர்க்காந்தமாகத்தான் இருக்கவேண்டும். அப்படியில்லாமையாலே பஹுவ்ரீஹிஸமாஸம் அவர்ஜநீயமென்க. வேலாதீதச்ருதிகளைப் பரிமளமாகவுடையது என்னவுமாம். உலகில் தாமரைப்பூவின் நறுமணம் ஸ்வல்பம்; அதுவும் காதாசித்கம்; திருவடியாகிற இந்தத் தாமரைப்பூவின் நறுமணமானது அங்ஙனன்றிக்கே அபரிமிதமாயும் ஸர்வகாலிகமாயுமுள்ளதென்பது இங்கு விவக்ஷிதம். "**வேலாதீத**" என்பதில் இவ்விரண்டு பொருளும் உறையும். "வேலா காலமர்யாதயோரபி" என்ற அமரகோசத்தின்படிக்கும், "வேலா காலே ச ஸீமாயாம்" என்ற மேதிநீகோசத்தின்படிக்கும் வேலாசப்தமானது அளவையும் காலத்தையும் சொல்லக்கடவதாகையாலே அளவுகடந்த பரிமளத்தையுடையது என்றும், காலாதீதமான [ஸர்வகாலவர்த்தியான] பரிமளத்தையுடையதென்றும் பொருளாகக் குறையில்லை.

இங்கு ச்ருதிசப்தத்தாலே திருவாய்மொழியாகிற த்ராவிடச்ருதியை விவக்ஷித்து, அதில் முதற்பாசுரத்தில் * துயரறுசுடரடி * யென்று பாதாரவிந்த ப்ரஸ்தாவம் செய்திருக்கையாலே அந்த நறுமணத்தைக் கொண்டிருப்பதென்று உரைப்பது மிகப்பொருந்தும். * முகில்வண்ணனடிமேல் சொன்னசொல் மாலையிறே. யதிராஜஸப்ததியில் * யஸ்ய ஸாரஸ்வதம் ஸ்ரோதோ வகுளாமோத

வாஸிதம், ச்ருதீநாம் விச்ரமாயாலம் சடாரீம் தமுபாஸ்மஹே * என்றருளிச்செய்த வருடைய திவ்யஸூக்தியாகையாலே ச்ருதிபரிமளமென்பது இதுவேயாகை உசிதம். வேலாதீத என்பதை ச்ருதிக்கு விசேஷணமாகக் கொண்டால் ஸர்வாதிகாரமான ச்ருதியென்று திருவாய்மொழியை ஸுஸ்பஷ்டமாகத் தெரிவித்ததாகும். அதையே பரிமளமாகவுடையது பாதாம்போஜம் என்க.

[**வேதஸாம் மௌலிஸேவ்யம்**] அநாதியான ஸம்ஸாரத்தில் ப்ரஹ்மபட்டம் பெற்றுக் கழிந்தவர்களுக்குக் கணக்கில்லாமையாலே "**வேதஸாம்**" என்று பஹுவசந ப்ரயோகம் பண்ணிக்கிடக்கிறது. தசாவதாரஸ்தோத்ரத்திலும் [*ப்ரத்யாதிஷ்ட.......யாத்ருச்சிகாத் **வேதஸாம்** *] என்றும், மற்றும் பலவிடங்களிலும் தேசிகஸூக்திகளில் பஹுவசநப்ரயோகமேயுள்ளது. பாதாம்போஜமென்று திருவடியைப் புஷ்பமாகப் பேசினதற்குச்சேர "**மௌலிஸேவ்யம்**" என்றது. பலபல நான்முகக்கடவுளர்க்குச் சென்னிக்கு மலர்ந்த பூவாயிற்று அரங்கனடியிணை. * அமரர் சென்னிப்பூவினை * என்று எம்பெருமான்தன்னையே அமரர்சென்னிப்பூவாக வருளிச்செய்தார் திருமங்கையாழ்வார்; * கோலமாமென் சென்னிக்கு உன்கமலமன்ன குரைகழலே * அடிச்சியோம்தலைமிசை நீயணியாய் ஆழியங்கண்ணாவுன் கோலப்பாதம் * இத்யாதிப்படியே சிரோதார்யத்வம் திருவடிக்கு மிகப்பொருந்துமாகையாலே "மௌலிஸேவ்யம் பாதாம்போஜம்" என்றது. ஸ்ரீரங்கநாதனுடைய திருவடிகளை விசேஷித்து நான்முகன் ஆராதித்துப்பணிந்தது புராணப்ரஸித்தம். அது "எம்மாண்பினயன் நான்கு நாவினாலுமெடுத்தேத்தி" என்கிற பெருமாள் திருமொழிப்பாசுரத்தினாலும், "ஸர்க்காப்யாஸவிசாலயா நிஜதியா....கல்பாநேவ பஹூந் **கமண்டலுகளத் கங்காப்லுதோபூஜயத் ப்ரஹ்மா** த்வாம் மூகலோசநாஞ்ஜலிபுடை: பத்மைரிவாவர்ஜிதை:" "மங்வங்வவாயே **த்ருஹிணோ** ச தந்யே" இத்யாதி ஸ்ரீரங்கராஜஸ்தவ ஸூக்திகளாலும் விசதம். அவற்றைக் கடாக்ஷித்தே இங்கு "**வேதஸாம் மௌலிஸேவ்யம்**" என்றது.

[**ஹம்ஸஜுஷ்டே, கநகஸரிதஸ் ஸைகதே ப்ராதுர்ப்பூதம்**]. உலகில் தாமரை சேற்றிலே முளைப்பதன்றி மணலிலோ மணற்குன்றிலோ முளைக்கவில்லாது; ப்ரக்ருதத்தில் அநுபவிக்கப்படுகிற தாமரையானது * திடர்விளங்கு கரைப் பொன்னி நடுவுபாட்டில் தோன்றிற்றாகையாலே **ஸைகதே ப்ராதுர்ப்பூத**மென்று அதிசயமாகவருளிச்செய்கிறபடி. திருக்காவிரியானது தென்மொழியில் பொன்னியாறென்றும், வடமொழியில் ஹேமாபகா, கநகஸரித் என்றும் கூறப்படும். பொன்களைக் கொழித்துக்கொண்டு வருகிறதென்னுங் காரணத்தினாலும், காவிரி மணல்கள் மிகநுட்பமான ஸுவர்ணம்சங்களைக் கொண்டிருக்கின்றனவென்னும் ப்ரஸித்தியினாலும் இப்பெயர் நிகழ்ந்ததென்பர். [**ஹம்ஸஜுஷ்டே**] என்கிற விசேஷணமானது. * மென்னடையன்னம் பரந்து விளையாடும்படியைமட்டும் சொல்லுகிறதன்று; * சிற்றெயிற்று முற்றல்மூங்கில் மூன்றுதண்டரொன்றினர், அற்றபற்றர் சுற்றிவாழுமந்தணீரரங்கமே * என்ற திருமழிசைப்பிரான் பாசுரத்தின்படி பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யர்கள் சூழ்ந்திருக்கும்படியையும் தெரிவிக்கின்றது. ஆளவந்தார் எம்பெருமானார் எம்பார் அருளாளப் பெருமாளெம்பெருமானார் நஞ்சீயர் முதலான பரமஹம்ஸ மஹாசார்யர்கள் நிச்சலுமுறைந்து ஸேவித்தவிடமிறே தென் திருவரங்கம். * என்னமுதினைக்கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே* என்று அநுபவித்த திருப்பாண்பெருமாளுக்கு வாஹனமாயமைந்த லோகஸாரங்க மஹாமுனிகளையும் நினைப்பது. கீழே "வேதஸாம் மௌலிஸேவ்யம்" என்று ப்ரஹ்மாவின் ப்ரஸ்தாவமுள்ளதனால் பிரமன் ஸேவார்த்தமாக இங்குவரும்போது அவனுக்கு ஊர்தியாக வந்தஹம்ஸம் திருக்காவிரியின் மணற்குன்றிலே பீடுபட்டிருக்கும் படியைச் சொல்லிற்றாகவுமாம்.

[லக்ஷ்மீபூம்யோ: கரஸரஸிஜைர் லாலிதம்] *வடிவிணையில்லாமலர்மகள் மற்றை நிலமகள்பிடிக்கும் மெல்லடியிறே. "பத்மாதாத்ரீகராப்யாம் பரிசிதசரணம் ரங்க ராஜம்" என்றும் "ஸ்ரீரங்கேசயஜங்கே ஸ்ரீபூம்யாமர்ச ஹர்ஷகண்டகிதே" என்றும் பட்டருளிச்செய்தார். பிள்ளைப்பெருமாளும் கலம்பகம் தொடங்கும்போதே "சீர் பூத்த செழுங்கமலத் திருத்தவிசின் வீற்றிருக்கும் நீர்பூத்த திருமகளும் நிலமகளு மடிவருட" என்றார். உலகில் "ராஜாக்களை ராஜாக்கள் ஆதரிப்பர், வித்வான்களை வித்வான்கள் ஆதரிப்பர்" என்னுமாபோலே தாமரையைத் தாமரையாதரிக்கு மென்னப் பொருந்துமாகையாலே பாதாம்போஜத்தைக் கரஸரஸிஜம் லாலநம் செய்வதாகச் சொன்னவிது ரஸிக்கத்தக்கது. ஆக இப்படிப்பட்ட அரங்கனடியிணை [மே பாவநாதீர்க்கிகாயாம் ப்ரதிபலதி] தம்முடைய சிந்தனையை ஒருவாவியாக ரூபணம்செய்து அதுதன்னிலே ப்ரதிபலிப்பதாகவருளிச் செய்கிறார். ஜலாசயத்தி லுள்ளது ஜலாசயத்திலேயே ப்ரதிபலிக்கக்கடவதாகையாலே கீழே கநக ஸரித: என்று கூறினதற்கு ஈடாக பாவநாதீர்க்கிகாயாம் என்றது. ... (உ)

चित्राकारां कटकरुचिभिश्चारुवृत्तानुपूर्वां काले द्रुत्यद्रुततरगतिं कान्तिलीलाकलाचीम् ।
जानुच्छायाद्विगुणसुभगां रङ्गभर्तुर्मदात्मा जङ्घां दृष्ट्वा जनपदवीजाङ्घिकत्वं जहाति ॥ ३ ॥

சித்ராகாராம் கடகருசிபிச் சாருவ்ருத்தாநுபூர்வாம்
காலே தூத்யத்ருததரகதிம் காந்திலீலாகலாசீம்,
ஜாநுச்சாயாத்விகுணஸுபகாம் ரங்கபர்த்துர் மதாத்மா
ஜங்காம் த்ருஷ்ட்வா ஜநநபதவீஜாங்கிகத்வம் ஜஹாதி. (ங)

| | | | |
|---|---|---|---|
| கடக ருசிபி: சித்ர ஆகாராம் | திருவடித் திருவாபரணங்களின் காந்திகளினுல் நாநாவர்ணமான உருவத்தை யுடையதும் | காந்தி லீலா கலாசீம் | காந்தி முழுவதும் தங்கியிருப்பதற்கான வொரு பாத்திரம் போன்றதும் |
| சாரு வ்ருத்த அநு பூர்வாம் | அழகியதும் வர்த்துலாகாரமுடையதும் மேல் பாகத்திற்கு இணங்கியதும் | ஜாநுச்சாயா த்விகுண ஸுபகாம் | திரு முழந்தாளின் காந்தியினுல் இரட்டித்த அழகை யுடையதுமான |
| காலே | தூது செல்ல நேருங்காலத்தில் | ரங்கபர்த்து: ஜங்காம் | ஸ்ரீரங்கநாதனது கணைக்காலை |
| தூத்ய த்ருததர கதிம் | தூதுபோவதில் பதற்ற முடையதும் | மத் ஆத்மா த்ருஷ்ட்வா | என்மனம் ஸேவித்து |
| | | ஜநநபதவீ ஜாங்கிகத்வம் ஜஹாதி | ஸம்ஸார ஸரணியில் ஓடிக் கொண்டிருப்பதைத் தவிர்கின்றது. |

* * * ஸ்ரீரங்கநாதனுடைய கணைக்கால்களை ஸேவித்தமாத்திரத்தில் "புநரபி ஜநநம் புநரபி மரணம் புநரபி ஜநநீஜடரே பதநம்" என்னும்படியான ஸம்ஸார காந்தார ஸஞ்சாரம் தொலைந்ததாமென்கிற திருவுள்ளத்தைக் காட்டுகிறது இந்த ச்லோகம். * இணைக்காலில் வெள்ளித்தளை நின்றிலங்கும் கணைக்காலிருந்தவா காணீரே * என்று பெரியாழ்வார் அநுஸந்தித்த திருவாபரணச் சேர்த்தியைத் திருவுள்ளம்பற்றி "கடகருசிபிச் சித்ராகாராம்" என்கிறார். கடகமென்பது பாத கடகம். தண்டையைச் சொன்னபடி. அது கனகமயமாய் நாநாரத்னங்களிழைக்கப் பெற்றிருக்கும்; ஒவ்வொரு ரத்னமும் ஒவ்வொரு நிறமான வொளியையுடைத்தா யிருக்குமாகையாலே பல நிறங்களான வொளிகள் பரம்பியதனுல் கணைக்கால் சித்ராகாரமாய்த் திகழாநின்றதென்கை.

[சாருவ்ருத்தாநுபூர்வாம்] குமார ஸம்பவத்தில் பார்வதியின் கணைக்காலை வருணிக்கின்ற மஹாகவி (1-35.) * वृत्तानुपूर्वे च नचातिदीर्घे जंघे शुभे—வ்ருத்தாநுபூர்வே ச நசாதிதீர்க்கே ஜங்கே சுபே * என்றவிடத்து வியாக்கியானத்தில் மல்லிநாதர் "वृत्ते वर्तुले; पूर्वमनुगते अनुपूर्वे; गोपुच्छाकारे इत्यर्थः; वृत्ते च ते अनुपूर्वे च वृत्तानुपूर्वे" என்று வியாக்கியான மியற்றி யுள்ளார். ஜங்கையை வருணிக்குமிடங்களில் * வ்ருத்தாநுபூர்வமென்று வருணிக்கிறபடியைக் காண்கிறோம். நக்ஷத்ரமாலிகையிலும் ஆழ்வாருடைய ஜங்கா வர்ணனத்தில் "நத்வா யாம்........விஸ்தீர்ணச்சவிசாகயா சடஜிதோ வ்ருத்தாநுபூர்விஜுஷா ஜங்காகல்பதருச்ரியா" என்றுள்ளது. அமையவேண்டியரீதியில் அமைந்திருப்பதென்பது பரமதாற்பரியம்.

[காலே தூத்யத்ருததரகதிம்] பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் ஸ்ரீரங்கநாதனுடைய திருவடிவர்ணனத்தில் "யத் ப்ருந்தாவநபண்டிதம்........யத் தூத்ய ப்ரஸங்கோத்ஸுகம்" என்றருளிச் செய்தார். இவர்தாமும் பாதுகாஸஹஸ்ரத்திலே "யோஷித்பூதத்ருஷந்தி .....தூத்யாதிஷ்வபி துர்வசாநி பதயோ: க்ருத்யாநி" என்றருளிச்செய்கிறார். நவரத்தினமாலையென்னும் பிரபந்தத்திலும் * அடியவர் மெய்யர் மலர்ப்பதங்களைத் துதிக்கும் முதற்பாட்டில் "தருமனிரந்தது இசைந்து சென்றன" என்கிறார். இங்ஙனே திருவடியின் செயலாகச் சொல்லப்படுகிற தூது செல்லுஞ்செயல் இங்கு ஜங்கைக்குச் சொல்லப்படுவதனால் ஒரு குறையுமில்லை. ஜங்காபல முள்ளவர்களுக்கே நடந்து செல்வது எளிதாகுமாதலால் பாதத்தின் செயலான விதனை ஜங்கைக்குச் சொல்லுவது பொருத்தமேயாகும்; ஜங்கையும் பாதைக தேசமிறே. தூதுசென்ற கண்ணபிரானும் அரவணைமேல் பள்ளிகொள்ளு மரங்கனும் தர்ம்யைக்யத்தாலே அபிந்நவ்யக்திகளென்று காட்டுதற்காக இந்த விசேஷணமிட்டபடி. "மதுரைமாநகரந்தன்னுள் கவளமால்யானை கொன்ற கண்ணனை யரங்கமாலை" "கோவலனாய் வெண்ணெயுண்ட வாயனண்டர்கோனணியரங்கன்" என்றிப்புடைகளிலேயிறே ஆழ்வார்களுமநுபவித்தது.

[காந்திலீலா கலாசீம்] 'கலாசி' என்று, அடி சிறுத்து வாய்விரிந்ததான வொரு பாத்ரவிசேஷத்திற்கு வாசகமான சப்தமென்று கொள்வது. படிக்கம் என்னலாம். மேலான அவயவங்களினின்றும் பெருகும் ஸௌந்தர்யப்ரவாஹத்தை தன்னில் தாங்கிக் கொண்டிருக்க வல்லதொரு பாத்திரமோ! என்னலாம்படி யுள்ளதாம் கணைக்கால். லீலாசப்தத்தைக் காந்தியோடு சேர்க்கலாகாது; கலாசியோடு சேர்க்க வேணும். லீலைக்காக வைத்துக்கொள்ளப்படுகிற கலாசியென்றபடி. அது, காந்திகளைத் தாங்குவதற்கு உபயுக்தமாவதாலே 'காந்திலீலாகலாசீம்' எனப்பட்டது.

[ஜாநுச்சாயாத்விகுணஸுபகாம்] திருமுழந்தாளும் திருக்கணைக்காலும் மிக நெருங்கின திவ்யாவயவங்களாகையாலே முழந்தாளின் அழகும் ஜங்கையினழகோடே சேர்ந்து இரட்டித்த அழகு பொலிந்ததாயிற்று. द्विगुणं यथा तथा सुभगाम् என்று விரிக்க. ஆக இப்படிப்பட்ட ரங்கபர்த்து: ஜங்காம் மஹாத்மா த்ருஷ்ட்வா ஜநநபதவீ ஜாங்கிகத்வம் ஜஹாதி. அரங்கனுடைய திருக்கணைக்காலை ஸேவித்தபிறகு நமக்கு ஸம்ஸாரஸரணியில் ஓட்டம் தடைபட்டு நிற்குமென்றதாயிற்று. .... (3)

कामारामस्थिरकदलिकास्तम्भसंभावनीयं क्षौमाश्लिष्टं किमपि कमलाभूमिनीलोपधानम् ।
न्यञ्चत्काञ्चीकिरणरुचिरं निर्विशत्यूरुयुग्मं लावण्यौघद्वयमिव मतिर्मामिका रङ्गयूनः ॥ ४ ॥

காமாராமஸ்திரகதலிகாஸ்தம்பஸம்பாவநீயம்
க்ஷௌமாச்லிஷ்டம் கிமபி கமலாபூமிநீளோபதாநம்,
ந்யஞ்சத் காஞ்சீ கிரணருசிரம் நிர்விசத்யூருயுக்மம்
லாவண்யௌகத்வயமிவ மதிர் மாமிகா ரங்கயூந:. (௪)

| | |
|---|---|
| காம ஆராம ஸ்திர கதலிகாஸ்தம்ப ஸம்பாவநீயம் | மன்மதன் தோட்டத்திலே நிலைநின்று வளர்ந்த வாழை மரமோ! என்னலாம் படியுள்ளதும் |
| க்ஷௌம ஆச்லிஷ்டம் | பீதாம்பரத்தை யணிந்து கொண்டிருப்பதும் |
| கிமபி கமலா பூமி நீளா உபதாநம் | ஸ்ரீ பூமிநீளா தேவிகளுக்கு விலக்ஷணமான தலையணை போன்றதும் . |
| ந்யஞ்சத் காஞ்சீ கிரண ருசிரம் | கீழ் முகமாக மிளிர்கின்ற கடிபூஷண வொளிகளினால் அழகு பெற்றதுமான |
| ரங்கயூநः ஊரு யுக்மம் | ஸ்ரீ ரங்கநாதனுடைய திருத்துடையிணையை |
| மாமிகா மதிः | எனது சிந்தனையானது |
| லாவண்ய ஓக த்வயம் இவ நிர்விசதி | லாவண்ய ப்ரவாஹமிரண்டென்றுகொண்டு அநுபவிக்கின்றது. |

* * * அழகிய மணவாளனுடைய திருத்துடையிணையை யநுபவித்துப் பேசுகிறார். அடிபருத்து நுனிசிறுத்து மதமதென்று மாம்ஸளங்களாய் விளங்கும் துடையை கந்தளித கதளீகாண்டத் தோடொப்ப வருணிப்பது கவி ஸம்ப்ரதாயமாதலால் **கதளீஸ்தம்பஸம்பாவநீயம்** என்றது. ப்ரஸித்தமாய் உபமாநமாகச் சொல்லப்படுகிற வஸ்துக்களையெடுத்து 'உபமேயத்துக்கு இவை நேர் நில்லா' என்று கழித்துவிடுவதுமுண்டு. அழகிய மணவாளனுடைய திருத்துடைகளையே வருணிக்கின்றபட்டர் * रम्भाकरभकरीन्द्रकराभिरूप्यदर्पम्...परिभूय गर्वगुर्वी: किमुपमिमीमहि रङ्गकुञ्जरोर्वो :— ரம்பாகரபகரீந்த்ர கராபிரூப்யதர்ப்பம்.......பரிபூய கர்வகுர்வோः கிமுபமிமீமஹி ரங்ககுஞ்ஜரோர்வோः* என்றார். கதளீஸ்தம்பாதிகளை வென்று விளங்குகின்ற திருத்துடைகளுக்கு உபமானமாகச் சொல்லக்கூடிய வஸ்துவேயில்லை யென்கை. பார்வதியின் துடைகளை வருணிக்கின்ற மஹாகவி "एकान्तशैत्यात्कदलीविशेषा:...जातास्तदूर्वोरुपमानबाह्या:—ஏகாந்தசைத்யாத் கதலீவிசேஷாः....—ஜாதாஸ் ததூர்வோருபமாநபாஹ்யாः" என்றான். ஆக உபமிக்கத்தகாததாகக் கழிக்கப்பட்ட கதலீஸ்தம்பத்தை இங்கு உபமானமாகத் திருவுள்ளம்பற்றி "**கதலீஸ்தம்பஸம்பாவநீயம்**" என்று எங்ஙனமருளிச்செய்கிறாரென்று சங்கிக்க வேண்டா; ஒக்குமென்பதும், ஒவ்வாதென்பதும், எடுத்துக்கழிக்க ப்ரஸக்திதானுமில்லை யென்பதுமாகிய இவையெல்லாம் கவிகளின் கோஷ்டியில் பர்யாயமேயென்று கொள்ளலாம். கதளீஸ்தம்பத்தாலே ஸம்பாவநீயமென்று கொண்டு கதளீஸ்தம்பத்தினால் கௌரவிக்கத்தக்கதாகவுள்ளதென்று பொருள் கொள்ளலாமென்பர் சிலர்.

அந்த கதளீஸ்தம்பம் எந்த தோட்டத்திலுண்டானதென்ன [**காமாராம**] மன்மதோத்யானத்திலுண்டானதென்கிறார். தேவேந்திரனுக்கு நந்தனமென்னும் தோட்டம் போலவும், குபேரனுக்கு சைத்ரரதமென்னும் தோட்டம் போலவும் மன்மதனுக்கு ஒரு தோட்டமிருப்பதாக ப்ரஸித்தியில்லையாயினும் இது கல்பித்துச் சொல்லுகிறதித்தனை. மன்மதன் வில்லாகக் கொள்ளுகிற கரும்பும், அம்பாகக் கொள்ளுகிற மலர்களும் எந்தத் தோட்டத்தில் விளைகின்றனவோ அதுதன்னிலேயே வாழையும் விளையத்தட்டில்லையென்று கொள்க. "**ஸ்திரகதளிகா**" என்றது பெருங்காற்றுக்கும் சலியாமல் என்றுமழியாமல் நிலைத்துநிற்கிற வாழை என்றபடி.

[**க்ஷௌம ஆச்லிஷ்டம்**] பீதாம்பராலங்க்ருதமென்று கருத்து. (அசேதந வஸ்துவும் ஆச்லேஷம் செய்துகொள்ள விரும்பும்படியான அழகு வாய்ந்ததென்கை.) [**கமலாபூமிநீளோபதாநம்**] * आविवाहसमयात् गृहे वने शैशवे तदनु यौवने पुन:। स्वापहेतुरनुपाश्रितोऽन्यया रामबाहुरुपधानमेष ते = ஆவிவாஹஸமயாத் க்ருஹே வநே சைசவே ததநு யௌவநே புநः, ஸ்வாபஹேது ரநுபாச்ரிதோந்யயா ராமபாஹுருபதாநமேஷ தே. * [உத்தரராமசரிதே] என்று பவபூதி சொன்னபடி பிராட்டிமார்க்கு எம்பெருமானுடைய பாஹுவேதான் தலையணையாகலாம், மற்றோரவயவம் ஆகத்தகாது என்றொரு கட்டளையில்லையே. அடி வருடாநின்ற தேவிமார்கள் சிறிது

ச்ரமம் தோன்றினவாறே திருத்துடையிலேயே தலையை வைத்து சயனிப்பர்களாயிற்று. ஆகவே திருமகளும் மண்மகளும் ஆய்மகளுமான தேவிமார் மூவர்க்கும் உபதாநமாயிருக்கும் திருத்துடைகளென்கிறது.

[ந்யஞ்சத்காஞ்சீ கிரணருசிரம்.] * அரங்கத்தம்மான் திருவயிற்றுதரபந்தம் என்னுள்ளத்துள் நின்றுலாகின்றதே* என்று திருப்பாணாழ்வார் அநுபவித்த உதரபந்த திவ்யாபரணத்தின் ஒளிகள் கீழ்முகமாக ப்ரஸரிக்க, அதனாலானவழகும் விஞ்சி விளங்கினபடி.

[லாவண்யௌகத்வயமிவ] ஆழ்வான் வரதராஜஸ்தவத்திலே * या ते गात्रे वरद जनिता कान्तिमय्यापगाऽभूत्तस्याः स्रोतोद्वितयमिह यद्याति पादप्रवादम्—யா தே காத்ரே வரத ஜநிதா காந்திமய்யாபகாபூத் தஸ்யாः ஸ்ரோதோத்விதயமிஹ யத் யாதி பாதப்ரவாதம் * என்றருளிச் செய்த ச்லோகத்தையடியொற்றிப் பேசுகிறபடி; திருமேனியில் தோன்றின லாவண்யப்ரவாஹமானது திருநாபியளவும் ஒரேபெருக்காகப் புரண்டோடி வந்து அதன் கீழே இருபிரிவாகப் பிரியலுற்றதோ! என்னலாம்படி யிருக்கின்றதாயிற்று திருத்துடையிணை. இதனுடைய பரிபூர்ணாநுபவம் செல்லா நின்றபடியை யருளிச்செய்தாராயிற்று. ... ... (௪)

संप्रीणाति प्रतिकलमसौ मानसं मे सुजाता गम्भीरत्वात् क्वचन समये गूढनिक्षिप्तविश्वा ।
नालीकेन स्फुरितरजसा वेधसो निर्मिमाणा रम्यावर्तद्युतिसहचरी रङ्गनाथस्य नाभिः ॥ ५ ॥

**ஸம்ப்ரீணாதி ப்ரதிகலமஸௌ மாநஸம் மே ஸுஜாதா**
**கம்பீரத்வாத் க்வசந ஸமயே கூடநிக்ஷிப்தவிச்வா,**
**நாலீகேந ஸ்புரிதரஜஸா வேதஸோ நிர்மிமாணா**
**ரம்யாவர்த்தத்யுதிஸஹசரீ ரங்கநாதஸ்ய நாபிः.** (௫)

| | | | |
|---|---|---|---|
| ஸுஜாதா | ஆபிஜாத்யமுடையதும் | வேதஸः நிர்மிமாணா | நான்முகக் கடவுளர்களைப் படைத்துக் கொண்டிருப்பதும் |
| கம்பீரத்வாத் | ஆழமுடைமையினாலே | | |
| க்வசந ஸமயே | (பிரளயமாகிற) ஒருஸமய விசேஷத்திலே | ரம்ய ஆவர்த்த த்யுதி ஸஹசரீ | அழகிய நீர்ச்சுழியின் காந்தியோடொத்த காந்தியையுடையதுமான |
| கூட நிக்ஷிப்த விச்வா | ஸகல புவனங்களையும் தன்னுள்ளேமறைத்து வைத்துக் கொண்டதும் | ரங்க நாதஸ்ய அஸௌ நாபிः | அரங்கனது இந்தத் திருநாபியானது |
| ஸ்புரித ரஜஸா | தோன்றப்பெற்ற தூளையுடைய | ப்ரதிகலம் | க்ஷணந்தோறும் |
| நாலீகேந | உந்திக் கமலத்தினால் | மே மாநஸம் | எனது உள்ளத்தை |
| | | ஸம்ப்ரீணாதி | உகப்பிக்கின்றது. |

"அயனைப் படைத்ததோரெழிலுந்தி மேலதன்றோ அடியேனுள்ளத்தின்னுயிரே" என்று திருப்பாணாழ்வாரநுபவித்தபடியே பெரிய பெருமாளுடைய திருநாபியை யநுபவிக்கிறாரிந்த ச்லோகத்தில். [ரங்கநாதஸ்ய ஸுஜாதா நாபிः] அணியரங்கனுடைய அழகிய திருநாபி எங்ஙனேயிராநின்றதென்னில்; [கம்பீரத்வாத் க்வசந ஸமயே கூடநிக்ஷிப்தவிச்வா] * மண்ணாடும் விண்ணாடும் வானவரும் தானவரும் மற்றுமெல்லாம் உண்ணாத பெருவெள்ளமுண்ணாமல் தான்விழுங்கியுய்யக் கொண்ட * என்கிறபடியே, பிரளயமாகிற ஒருகாலவிசேஷத்திலே* நளிர்மதிச் சடையனும் நான்முகக் கடவுளும் தளிரொளியிமையவர் தலைவனுமுதலா யாவகையுலகமும் யாவருமகப்படத் தன்னுள்ளே மறைத்து வைத்துக்கொண்டிருந்தது. இத்தனைக்கும் சிறிய நாபியிலே இடம்போதுமோவென்று சங்கிக்க வேண்டாமைக்காக

* கம்பீரத்வாத் * என்றது. * தாழ்குழலார்வைத்த தயிருண்ட பொன் வயிறு இவ் வேழுலகுமுண்டு மிடமுடைத்து * என்னும்படியான ஆழமுடைய தென்கை.

இன்னமும் திருநாபி எப்படிப்பட்டதென்ன; [ஸ்புரிதரஜஸா நாளீகேந வேதஸ꞉ நிர்மிமாணு] நாளீகமாவது தாமரை; * नाभीनालीकरिङ्गन्मधुकरपटली—நாபீநாளீகரிங் கந்மதுகரபடலீ * என்று தத்வமுக்தாகலாப மங்கல ச்லோகத்திலும் ப்ரயோக முள்ளது. * தன்னுபிவலயத்துப் பேரொளிசேர் மன்னியதாமரை மாமலர்பூத்து, அம்மலர்மேல் முன்னம் திசைமுகனைத்தான்படைக்க*(பெரிய திருமடல்.) *உய்யுலகு படைக்கவேண்டி உந்தியில் தோற்றினாய் நான்முகனை * என்று சொல்லுகிற படியே திருநாபியானது தன்னிடத்துண்டான தாமரைப் பூவினாலே எண்ணிறந்த நான்முகக்கடவுளர்களைப் படைத்ததாயிற்று. ஸ்புரிதரஜஸா என்று தாமரைக்கு இட்ட விசேஷணத்தினால் அதுவிகஸிதம் என்று தெரிவித்தபடி. விகாஸதசையில் தானே ரஜஸ்ஸுக்கு ஸ்புரணமுண்டாகும். ரஜஸ்ஸென்று புஷ்பத்திலுள்ள துகளைச் சொல்லுகிறது.

இன்னமும் எப்படிப்பட்டதென்னில்; [ரம்யாவர்த்தத்யுதிஸஹசரீ] வெள்ளம் அதிகமாமிடத்தில் நீர்ச்சுழியுண்டாவது ஸஹஜம்; அதுபோலே பெரிய பெரு மாளுடைய திவ்யாவயவங்களிலே ஸௌந்தர்ய லாவண்யப்ரவாஹபுஞ்ஜம் விஞ்சின வாறே நாபியென்னும் வியாஜத்தினால் சுழியுண்டாயிற்றோ! என்னலாம்படி யிருந்தது. ஸஹசரீ என்றது ஸத்ருசீ என்றபடி. ஆக இப்படிப்பட்ட ஸ்ரீரங்க நாதனுடைய திருநாபியானது தம்முடைய திருவுள்ளத்திற்கு இனிதாயிருக்கும் படியையருளிச்செய்தாராயிற்று. ப்ரதிகலம் என்றது அநுக்ஷணம் என்றபடி. கலா, காஷ்டா இத்யாதிகளான சொற்கள் மிக அற்பமான கால அளவைக்குறிக்கு மவையென்க.

இந்த ச்லோகத்தில் பதப்ரயோகங்களை ஊன்றி நோக்குமிடத்து ஸமா ஸோக்தியலங்காரரீதியில் அப்ரஸ்துதமானவொரு குலஸ்த்ரீவ்ருத்தாந்தமும் தோற் றும். ஸுஜாதா என்று குலமகளைச் சொல்லுகிறது. [கம்பீரத்வாத் இத்யாதி.] கம்பீரப்ரக்ருதியினாலே க்ருஹச்சித்ரம் முதலானவற்றில் எதையும் வெளிவிடாமல் நெஞ்சிலுள்ளே மறைத்து வைத்துக்கொண்டிருப்பளென்கை. அவள் கன்னிகைப் பருவம் நீங்கின பின்பு, வேதாத்யயநாதிகளிலே பிரமனையொத்த ஸத்புத்ரர்களை ப்ரஸவிக்கும்படி சொல்லுகிறது மூன்றுவது பாதத்தினால். ஆழ்வார்கள் திவ்ய தேசங்களை வருணிக்குமிடங்களில் * திசைமுகனனையோர் நாங்கைநன்னடுவுள் * என்றும் * திசைமுகனேயனைவர்கள்... அணியழுந்தூர் * என்றும் * வண்சிவனும் அயனுந்தானுமொப்பார்வாழ்.......திருச்சிற்றாறு * என்று மருளிச்செய்து போரு வர்களிறே. ஆகவே, வேதஸ꞉ என்றது—பிரமன் போன்ற ஸத்ஸந்தானங்களை யென்றபடி. ... ... ... (ஞ)

श्रीवत्सेन प्रथितविभवं श्रीपदन्यासधन्यं मध्यं बाह्वोर्मणिवररुचा रञ्जितं रङ्गधाम्नः ।
सान्द्रच्छायं तरुणतुलसीचित्रया वैजयन्त्या सन्तापं मे शमयति धियश्चन्द्रिकोदारहारम् ॥ ६

ஸ்ரீவத்ஸேந ப்ரதிதவிபவம் ஸ்ரீபதந்யாஸதந்யம்
மத்யம் பாஹ்வோர் மணிவருசா ரஞ்ஜிதம் ரங்கதாம்ந꞉,
ஸாந்த்ரச்சாயம் தருண துலஸீசித்ரயா வைஜயந்த்யா
ஸந்தாபம் மே சமயதி தியச் சந்த்ரிகோதாரஹாரம். (சு)

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீவத்ஸேந ப்ரதித விபவம் | ஸ்ரீவத்ஸமென்னும் மறுவினாலே பிரசுரம் செய்யப்பட்ட ஐச்வரியத்தை யுடையதும் | தருண துலஸீ சித்ரயா வைஜயந்த்யா | முற்றின திருத்துழாயலங்கலோடு சேர்ந்து சித்ர வர்ணமாகப்பெற்ற வனமாலையினாலே |
| ஸ்ரீ பதந்யாஸ தந்யம் | பெரிய பிராட்டியாருடைய திருவடிவைப்பினாலே பவித்திரமானதும் | ஸாந்த்ரச் சாயம் | திண்ணமான காந்தியை யுடையதும் |
| | | சந்த்ரிகா உதார ஹாரம் | நிலாப்போன்றழகிய முத்துவடத்தையுடையதுமான |
| மணிவர ருசா ரஞ்ஜிதம் | கௌஸ்துபமென்னும் குரு மாமணியினொளியினால் அழகு செய்விக்கப்பெற்றதும் | ரங்கதாம்நோ பாஹ்வோர்மத்யம் | ஸ்ரீரங்கநாதனுடைய திருமார்பானது |
| | | மே தியஃ ஸந்தாபம் சமயதி | என்னுடைய புத்தியிலுண்டான தாபத்தைத் தணிக்கின்றது. |

*** அரங்கத்தம்மான் திருவாரமார்விலே யீடுபட்டு அருளிச்செய்வதாமிந்த ச்லோகம். * அகலகில்லேனிறையுமென்று அலர்மேல் மங்கையுறையும் திருமார்பாகையாலே, குணலேசமின்றிக்கே தோஷமே வடிவெடுத்தவர்களான நம் பக்கலிலே இரங்கி மாத்ருத்வப்ரயுக்தமான வாத்ஸல்யாதிரேகத்தாலே புருஷகார க்ருத்யத்தைச் செய்து எம்பெருமான் பக்கலிலே சேர்ப்பிக்கவல்லவள் க்ஷணகாலமும் விச்லேஷியாதே நித்யவாஸம் பண்ணுமிடமன்றோவிது! என்றநுஸந்தித்தவாறே ஸகலதாபங்களும் தீரும்படியாயிருக்குமென்னுமதை ஸ்வாநுபவ முகத்தாலே அருளிச்செய்கிறாராயிற்று. திருமார்பினழகை ஐந்து விசேஷணங்களினால் பேசுகிறார். [**ஸ்ரீவத்ஸேந ப்ரதிதவிபவம்**] * ஸ்ரீவத்ஸாங்கனென்றும் *திருமறுமார்பனென்றும் குலாவப்படுகின்ற பெருமாளுக்கு அந்த ஸ்ரீவத்ஸம் திருமார்பிலே திகழுமாயிற்று. எம்பெருமானுக்குண்டான ஐச்வர்யத்துக்கெல்லாம் அதுதான் நிதானமாயிருக்குமென்று திருவுள்ளம்பற்றுகிறார். ஸ்ரீவத்ஸம் (அல்லது) திருமறுவென்பது மயிர்ச்சுழி. உலகத்திலும் சிலர்க்கு மச்சமிருக்கும்படிகண்டு "இதனால்தான் இவர்க்கு இத்தனை ஐச்வர்யம்"என்று சொல்வதுண்டிறே; இங்கும் அங்ஙனேயருளிச்செய்தபடி.

[**ஸ்ரீபதந்யாஸ தந்யம்.**] பிராட்டியெழுந்தருளியிருப்பதனாலே தந்யமானது என்னாதே அவளுடைய பாதவிந்யாஸத்தாலே தந்யமானது என்றருளிச்செய்தது "वेदान्तास्तत्त्वचिन्तां मुरभिदुरसि यत्पादचिह्नै स्तरन्ति—வேதாந்தாஸ் தத்வசிந்தாம் முரபிதுரஸி யத்பாதசிஹ்நைஸ் தரந்தி" [ஸ்ரீகுணரத்நகோசே] என்ற பட்டருடைய திவ்ய ஸூக்தியில் நோக்காலே. எந்த தெய்வம் பரதெய்வமோ? என்கிற விசிகித்ஸை வேதாந்தங் [உபநிஷத்துக்] களுக்கேயுண்டாகி ஒவ்வொரு தெய்வத்தையும் ஆராய்ந்து பார்த்து வருமளவிலே ஸ்ரீமந்நாராயணனுடைய திருமார்பிலே லக்ஷ்மீ பதலாக்ஷா லக்ஷணத்தைக் கண்டு 'இவனே தேவாதிதேவன்' என்றறுதியிடலாயிற்றென்பது உதாஹ்ருதமான பட்டர் ஸ்ரீஸூக்தியின் கருத்து. ஆகவே எம்பெருமானுடைய திருமார்புக்குப் பிராட்டி எழுந்தருளியிருப்பது மட்டும் ஏற்றமன்று, அவளுடைய திருவடியின் ஸம்பந்தமு முண்டானது விலக்ஷணமான ஏற்றமென்றதாயிற்று.

[**மணிவரருசா ரஞ்ஜிதம்**] * குருமா மணிப்பூண் குலாவித் திகழும் திருமார்பு * என்று பெரியாழ்வாருளிச் செய்தபடியே ஸ்ரீகௌஸ்துபத்தி னொளியாலே அதிசயிதமான சோபையையுடைத்தாயிற்று. இயற்கையான நீலநிறத் தோடே செந்நிறமான ஸ்ரீகௌஸ்துபகாந்தி சேரப்பெற்றதனாலேயுண்டான வைலக்ஷண்யத்தை யநுபவித்தபடி. [**தருணதுலஸீசித்ரயா வைஜயந்த்யா ஸாந்த்ரச்சாயம்**] தோளிணை மேலும் நன் மார்பின் மேலும் சுடர்முடி மேலும் தாளிணை மேலும் புனைந்த தண்ணந்துழாயின் சோபையும் வனமாலையின் சோபையும் விரவி மிகுந்த வொளி பெற்

ற தாயிற்று திருமார்பு. [சந்த்ரிகோதாரஹாராம்] " ஸந்தாபம் மே சமயதி ,, என்றதற்குப் பொருத்தமாக ஸாந்த்ரச் சாய மென்றும் சந்த்ரிகோதாரமென்று மருளிச் செய்தவிது மிகவழகியது. ஸாந்த்ரச்சாயையையும் சந்த்ரிகையையும் கண்டவாறே ஸந்தாபம் தணியக் கேட்கவேணுமோ? சமயது என்கிறபாடம் புதியது. (சு)

एकं लीलोपहितमितरं बाहुमाजानुलम्बं प्राप्ता रङ्गेशयितुरखिलप्रार्थनापारिजातम् ।
दृप्ता सेयं दृढनियमिता रश्मिभिर्भूषणानां चिन्ताहस्तिन्यनुभवति मे चित्रमालानयन्त्रम् ॥ ७

ஏகம் லீலோபஹிதமிதரம் பாஹுமாஜாநுலம்பம்
ப்ராப்தா ரங்கேசயிது ரகிலப்ரார்த்தநாபாரிஜாதம்,
த்ருப்தா ஸேயம் த்ருட நியமிதா ரச்மிபிர் பூஷணாநாம்
சிந்தாஹஸ்திந்யநுபவதி மே சித்ரமாலாந யந்த்ரம். (எ

| | | | |
|---|---|---|---|
| ரங்கேசயிது: | ஸ்ரீரங்கநாதனது | த்ருப்தா | செருக்குற்றதான |
| அகில ப்ரார்த்தநா பாரிஜாதம் | எல்லாருடையவும் வேண்டுகோளை நிறைவேற்றுவதில் கல்பவ்ருக்ஷம் போன்றதாய் | மே ஸேயம் சிந்தா ஹஸ்திநீ | எனது இந்த சிந்தனையாகிற யானைப் பேடையானது |
| லீலா உபஹிதம் | லீலார்த்தமாகத் தலையணையாகச் செய்து கொள்ளப்பட்டதான | பூஷணாநாம் ரச்மிபி: | திவ்ய பூஷணங்களின் கிரணங்களாகிற கயிறுகளாலே |
| ஏகம் பாஹும் | ஒரு இடத்திருக்கையையும் | த்ருட நியமிதா ஸதீ | திடமாகக் கட்டப்பட்டதாய்க்கொண்டு |
| ஆஜாநுலம்பம் இதரம் பாஹும் | முழந்தாள் வரையிலும் தொங்குகின்ற மற்றொரு வலத்திருக்கையையும் | ஆலாந யந்த்ரம் | கட்டுத் தறியிலே கட்டுப்பட்டிருப்பதை |
| ப்ராப்தா | பற்றினதாய்க்கொண்டு | அநுபவதி | அநுபவிக்கின்றது; |
| | | சித்ரம் | ஆச்சரியம்! |

*** பெரியபெருமாளுடைய இருதிருக்கைகளிலே தாம் ஆழங்காற்பட்டுப் பிணிப்புண்டிருக்கும்படியை ஒரு சமத்காரம் பொலியவருளிச் செய்கிறாரிதில். அகில ப்ரார்த்தநாபாரிஜாதம் என்னும் விசேஷணம் வாமதக்ஷிணங்களான இரண்டு திருக்கைகளிலும் அந்வயிக்கவுரியது. * அலம்புரிந்த நெடுந்தடக்கை * (திருநெடுந்தாண்டகம்) என்கிறபடியே போதும்போதுமென்னும்படியாகவன்றோ திருக்கைகள் வேண்டுவார் வேண்டுவன கொடுப்பது. " அகிலப்ரார்த்தநா " என்பதை ஸமாநாதிகரணமாகவும் வ்யதிகரணமாகவும் கொள்ளலாம். எல்லாவிதமுமான ப்ரார்த்தனைகள் என்றுகொண்டால் ஸமாநாதிகரணமாகக் கொண்டபடி. எல்லாருடையவும் ப்ரார்த்தனைகள் என்று கொண்டால் வ்யதிகரணமாகக் கொண்டபடி. இரண்டு வகையிலும் கருத்து ஒன்றேயாய்த் தேறும். * அர்த்திதார்த்தபரிதாநதீக்ஷிதங்களாயிறே திருக்கைகளிருப்பது.

இரண்டு திருக்கைகளில் ஒரு திருக்கை தலையணையாகக் கொள்ளப்பட்டும், மற்றொரு திருக்கை திருமுழந்தாளளவும் தொங்கவிடப்பட்டு மிருக்கும்படியை யதாவஸ்திதமாக முதல்பாதத்திலே யநுபவிக்கிறார். பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலே * किरीटं श्रीरङ्गेशयितुरुपधानिकृतभुजो विधीशाधीशत्वाद् घटत इति संस्पृश्य वदति । निहीनानां मुख्यं शरणमिति बाहुस्तदितरः स्फुटं ब्रूते पादाम्बुजयुगलमाजानु निहितः—கிரீடம் ஸ்ரீரங்கேசயிதுருபதாநீக்ருதபுஜோ விதீசாதீசத்வாத் கடத இதி ஸம்ஸ்ப்ருச்ய வததி, நிஹீநாநாம் முக்யம் சரணமிதி பாஹுஸ் ததிதர: ஸ்புடம் ப்ரூதே பாதாம்புஜயுகளமாஜாநு நிஹித:* என்றருளிச்செய்த ச்லோகம் இங்கே அநுஸந்தேயம். அதன் கருத்தையும் சிறிது விவரிப்போமிங்கு;—* अङ्गैरन्तर्निहितवचनैः सूचितस्सम्यगर्थः—அங்கைரந்தர் நிஹிதவசநைஸ் ஸூசிதஸ் ஸம்யகர்த்த:* என்கிறபடியே மௌநநியமம் கொண்டவர்களும் அங்கவிந்யாஸ விசேஷமாத்ரத்தாலே அபிப்ராயஸூசநம் பண்ணுவதுண்டிறே; அது

போல் பெரியபெருமாளுடைய இரண்டு திருக்கைகளும் ஊமைகளாயிருந்து சேஷ்டையினாலேயே வக்தவ்யாம்சத்தை விளங்கச் சொல்லுகின்றனவாம். எங்ஙனே யென்னில், தலையணையாக அமைத்துக்கொள்ளப்பட்ட ஒரு திருக்கையானது திருவபிஷேகத்தைத் தொட்டுக்கொண்டிருக்குமிருப்பினாலே 'ப்ரஹ்மருத்ரர்களுக்கும் தலைவரான நமக்கே [பெரியபெருமாளொருவர்க்கே] இத்திருவபிஷேகம் பொருந்தும் என்று தெரிவிக்கின்றது போலும். திருமுழந்தாளளவும் நீட்டிவைக்கப்பட்டிருக்கின்ற மற்றொரு திருக்கையானது திருவடியைத் தொட்டுக்கொண்டிருக்குமிருப்பினாலே 'இத்திருவடியிணையே தாழ்ந்தார்க்குத் தக்கபுகலிடம்' என்று தெரிவிக்கின்றது போலும். ஒரு திருக்கை பரத்வத்தைக் கோட்சொல்லித்தரக்கடவதாயும் மற்றொரு திருக்கை ஸௌலப்யத்தைக் கோட்சொல்லித் தரக்கடவதாயுமிரா நின்றதென்கை.

[**ப்ராப்தா த்ருப்தா ஸேயம் மே சிந்தாஹஸ்திநீ**] உலகில் பெரிய கையைப் பற்றினார்க்குச் செருக்கு உண்டாவது ஸஹஜமிறே. தம்முடைய சிந்தனை பெரிய பெருமாளுடைய இரண்டு திருக்கைகளையும் பற்றிக்கொண்டபடியாலே செருக்குற்றதாம்; 'மஹாபுருஷ ஹஸ்தாவலம்பம் பெற்றவெனக்கு என்னகுறை?' என்று கொண்டிருக்கையே செருக்காம். செருக்குற்றவன் ஒருவர் கையிலும் பிடிபடாமல் துள்ளித் துள்ளித் திரிவனன்றோ; அப்படியே ஸ்ரீரங்கநாத ஹஸ்தாவலம்பபலத்தினாலே செருக்குற்ற தம்முடைய சிந்தனையும் துள்ளித் திரியப் புக்கவாறே அங்ஙனம் திரியவொண்ணாதபடி கட்டுப்படுத்தப்பட்டதாம்; அங்ஙனம் கட்டுப்படுத்தின பரிகரம் எதுவென்னில்; [**பூஷணாநாம் ரச்மிபி:**] ரச்மி யென்று கிரணத்திற்கும் கயிற்றுக்கும் பெயர். கயிறுபோன்ற கிரணங்களினாலே யென்று ச்லிஷ்டரூபகம் கொள்க. தம்முடைய சிந்தனை பெரிய பெருமாளுடைய திருவாபரணங்களின் ஒளியிலே திகைப்புண்டு நின்றது என்றவாறு. இந்த சமத்காரோக்திக்கு அநுகுணமாகவே **சிந்தாஹஸ்திநீ** என்று தம்முடைய சிந்தனையை ஒரு யானைப் பேடையாக ரூபித்துப் பேசினது. ... ... ... (எ)

साभिप्रायस्मितविकसितं चारुबिम्बाधरोष्ठं दुःखापायप्रणयिनि जने दूरदत्ताभिमुख्यम् ।
कान्तं वक्त्रं कनकतिलकालंकृतं रङ्गभर्तुः स्वान्ते गाढं मम विलगति स्वागतोदारनेत्रम् ॥ ८ ॥

**ஸாபிப்ராயஸ்மிதவிகஸிதம் சாருபிம்பாதரோஷ்டம்**
**துக்காபாயப்ரணயிநி ஜநே தூரதத்தாபிமுக்யம்,**
**காந்தம் வக்த்ரம் கநகதிலகாலங்க்ருதம் ரங்கபர்த்து:**
**ஸ்வாந்தே காடம் விலகதி மம ஸ்வாகதோதார நேத்ரம்.** (அ)

| | | | |
|---|---|---|---|
| ஸாபிப்ராய ஸ்மித விகஸிதம் | கருத்தோடு கூடின புன்முறுவலாலே உல்லஸிதமாயும் | கநக திலக அலங்க்ருதம் | ஸுவர்ண திலகத்தினாலே அலங்கரிக்கப் பட்டதாயும் |
| சாரு பிம்ப அதர ஓஷ்டம் | அழகிய கொவ்வைக்கனி போன்ற கீழுதடு மேலுதடுகளை யுடையதாயும் | காந்தம் | மநோஹரமாயும் |
| துக்க அபாய ப்ரணயிநி ஜநே | ஆர்த்திகளைத் தீர்த்துக் கொள்ள விருப்பமுள்ள ஜனங்கள் விஷயத்தில் | ஸ்வாகத உதார நேத்ரம் | நல்வரவைத் தெரிவிக்கின்ற கம்பீரமான திருக்கண்களையுடையதாயுமிருக்கின்ற |
| தூர தத்த ஆபிமுக்யம் | வெகுதூரத்திலிருந்தே ஆபிமுக்யமளிப்பதாயும் | ரங்கபர்த்து: வக்த்ரம் | ஸ்ரீரங்கநாதனுடைய திருமுக மண்டலமானது |
| | | மம ஸ்வாந்தே காடம் விலகதி | எனது உள்ளத்தினுள்ளே ஆழ ஆழ்கின்றது. |

பெரிய பெருமாளுடைய ஸ்மிதவிகாஸம், அதரோஷ்டங்கள், திலகம், திருக்கண்கள் ஆகியவற்றைத் தனித்தனி யநுபவித்து ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு ச்லோகம் இட்டருளலாமாயினும் ஸம்க்ஷேப ருசியாலே இவற்றையெல்லாம் திருமுக மண்டலமாகிற ஒரவயவத்திலே சேர்த்து ஒரே ச்லோகத்திலநுபவிக்கிறார். * வாக்கும் நயனமும் வாயும் முறுவலும் மூக்குமிருந்தவா காணீரே * என்பன போன்ற பல பாசுரங்களுண்டிறேஇப்புடையில். அபிமத ஜநதர்சநானந்த வேகத்தாலே அர்ச்சாவதார ஸமாதியைக் கடந்து விம்மி வெளிவிழுகின்ற அவ்யக்த மதுர மந்தஹாஸ விலாஸத்தை முதல்விசேஷணத்திநல் அநுபவித்தாராயிற்று. உள்ளுண்டான அபிப்ராயமெல்லாம் ஸ்மிதத்திலேயே தோற்றநின்றபடியாலே [ஸாபிப்ராய] என்றது. * வாலியதோர் கனிகொல் வினையாட்டியேன் வல்வினை கொல்! கோலந் திரள் பவளக் கொழுந்துண்டங் கொலோவறியேன், நீல நெடுமுகில்போல் திருமேனியம்மான் தொண்டை வாய் * என்னலாம்படியான திருவுதடுகள் இருந்த ஸந்நிவேசத்தை [சாருபிம்பாதரோஷ்டம்] என்றநுபவித்தபடி. சாரு என்பதைத் தனியே பிரித்து முகத்திற்கு விசேஷணமாக்குவாருமுளர். அது வக்த்ரு விவக்ஷித மாயிரா தென்க.

[தூரதத்தாபிமுக்க்யம்] தன்னைக் காண வருமவர்களுக்குக் காட்சி கொடாதே "निद्राति स्नाति भुङ्क्ते चलति कचभरं शोषयत्यन्तरास्ते दीव्यत्यक्षैर्नचायं गदितुमवसरो भूय आयाहि याहि — நித்ராதி ஸ்நாதி புங்க்தே சலதி கசபரம் சோஷயதி அந்தராஸ்தே தீவ்யத்யக்ஷைர் நசாயம் கதிதுமவஸரோ பூய ஆயாஹி யாஹி." என்று சொல்லி வெருட்ட வாசலிலே ஆள் வைத்திருக்கும் துஷ்ப்ரபுவைப் போலன்றிக்கே, ஆர்த்தியோடு வரும் பக்தர்களை நெடுந்தூரத்திலிருந்தே குளிரக் கடாக்ஷித்து உத்ஸாஹ மூட்டவற்றாயிருக்கை. * அண்ணு வடியேனிடரைக் களையாயே * என்றும் * நெடியா யடியேனிடர் நீக்கே என்றும் சொல்லிக்கொண்டு தம்முடைய இடர்களைப் போக்கிக்கொள்ள விருப்பமுடைய வடியார் பக்கலிலேயாயிற்று இங்ஙனே இருப்பது. ஜநே என்கையாலே இன்னாரினையாரென்று வாசி பாராமே விஷயீகரிக்கிறபடி சொல்லுகிறது. [கநக திலகாலங்க்ருதம்] கஸ்தூரீ திலகம் போலே கநக திலகமும் ஸமயபேதேந வுண்டாயிருக்கும். [ஸ்வாகதோதார நேத்ரம்] * கரியவாகிப் புடை பரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவப் பெரியவாய திருக் கண்களானவை அடியார்களை வருக வருக வருகவிங்கே யென்று அன்புட னழைப்பனபோலே யிராநின்றன வென்கை. (அ)

माल्यैरन्तःस्थिरपरिमलैर्वल्लभास्पर्शमान्यैः कुप्यच्चोलीवचनकुटिलैः कुन्तलैः श्लिष्टमूले ।
रत्नापीडद्युतिशबलिते रङ्गभर्तुः किरीटे राजन्वत्यः स्थितिमधिगता वृत्तयश्चेतसो मे ॥ ९ ॥

மால்யைரந்தஸ் ஸ்திரபரிமலைர் வல்லபாஸ்பர்சமாந்யைঃ
குப்யச்சோலீவசநகுடிலை: குந்தலைச் ச்லிஷ்டமூலே,
ரத்நாபீடத்யுதிசபளிதே ரங்கபர்த்து: கிரீடே
ராஜந்வத்யஸ் ஸ்திதிமதிகதா வ்ருத்தயச் சேதஸோ மே. (௯)

| | |
|---|---|
| அந்த: மால்யை: | உள்ளே அணியப்பட்டிருக்கின்ற மலர்மாலைகளினுல் |
| ஸ்திர பரிமலை: | நீடித்திருக்கின்ற நறுமணத்தையுடையனவும் |
| வல்லபா ஸ்பர்ச மாந்யை: | பிராட்டிமாருடைய கரஸ்பர்சத்தாலே சிறப்புப் பெற்றனவும் |
| குப்யத் சோலீ வசந குடிலை: | கோபங்கொண்ட சோழநாட்டு மாதர்களின் வார்த்தைபோலே கௌடில்ய முடையனவுமான |

| | |
|---|---|
| குந்தலை: | திருக்குழல்களோடே |
| ச்லிஷ்ட மூலே | ஸம்பந்தம்பெற்ற மூலப்ரதேசத்தையுடையதாய் |
| ரத்ந ஆபீட த்யுதி சபலிதே | நவரத்திநங்களிழைத்த உச்சிப்பட்டையின் ஒளிகளினுல் நாநாவர்ணமுடையதாக ஆக்கப்பட்ட |
| ரங்கபர்த்து: கிரீடே | ஸ்ரீரங்கநாதனுடைய திருவபிஷேகத்தில் |
| மே சேதஸ: வ்ருத்தய: | அடியேனுடைய மநோவ்ருத்திகளானவை |
| ஸ்திதிம் அதிகதா: | நிலைபெற்றனவாகி |
| ராஜந்வத்ய: (அபூவந்) | கட்டுக்கு அடங்கினவாயின |

* * * தம்முடைய சித்தவ்ருத்தியானது பெரிய பெருமாளுடைய திருவபி ஷேகத்திலே யூன்றி, இதுவரையிலிருந்த நின்றவாறில்லாமையைத் தவிர்த்துக் கொண்டபடியை யருளிச்செய்கிறாரிதில். திருவபிஷேகத்திற்கு இரண்டு விசேஷணங்களிட்டருளுகிறார்—குந்தலை: ச்லிஷ்டமூலே என்றும் ரத்நபீட த்யுதி சபலிதே என்றும். முதல் விசேஷணத்திற்கு உள்ளீடான குந்தலங்களுக்கு மூன்று விசேஷணங்களுள்ளன. மால்யை: என்பது ஸ்வயம் விசேஷ்யம்; ஹேதௌ த்ருதீயா என்று கொள்வது. ஸ்திர பரிமளத்வத்திற்கு இது ஹேதுவாயிருக்கிறபடி. * சுடர்முடி மேலும் புனைந்த தண்ணந்துழாயுடையம்மான் * என்கிறபடியே திருமுடி மீதும் நறுமணம் மிக்க மாலைகளை யணிந்துகொண்டிருப்பதனாலே திருக்குழற் கற்றையினுள்ளே திவ்யபரிமளம் ஒருநாளும் விச்சேத மடையாமலிருக்கிறதாயிற்று. * களிமலர்த் துழாயலங்கல் கமழ்முடியன் * என்ற திருவாய்மொழி யநுஸந்தானம் புறவெள்ளமிட்டபடி. [வல்லபாஸ்பர்சமாந்யை:] * கூந்தல் மலர்மங்கைக்கும் மண் மடந்தைக்கும் குலவாயர் கொழுந்துக்கும் கேள்வனைகையாலே அந்த ஸ்ரீ பூமி நீளா தேவிகள் குழல்வாரி முடிக்கும் பணியிலே யூன்றியிருப்பதை யநுஸந்தித்து அவர்களின் கரஸ்பர்சத்தாலே பெருமை பெற்றபடியை யருளிச் செய்தாராயிற்று. வல்லபா சப்தத்தாலே ஆண்டாளை விவக்ஷித்து, அவள் சூடிக் களைந்த மாலையைச் சூடினமையாலே பெருமைபெற்றதென்று சிலர் கூறுவர்; இது சுவைமிக்க பொருளேயாயினும் வக்தாவுக்கு இது விவக்ஷிதமென்று கொள்வதற்கிடான சப்த ஸந்நிவேசமில்லை. நலிந்து கொள்ளில் கொள்ளலாம். நிருபபதமான ஸ்பர்ச சப்தம் கரஸ்பர்சத்தையே இயல்பாகச் சொல்லக்கடவது.

[குப்யச் சோளீவசந குடிலை:] உத்தமகேச பாசங்களுக்குக் கௌடில்யத்தை உத்கர்ஷமாகச் சொல்லுவதுண்டிறே. வளைந்து மடிந்திருப்பதுதான் கௌடில்யமென்பது. இதற்கு ஏதத் ஸமாநாகாரமான ஒரு மூர்த்த பதார்த்தத்தை த்ருஷ்டாந்தமாகக் கூறாமல் * குப்யச் சோளீவசந குடிலை: * என்று விலக்ஷணமாக வருளிச் செய்தவிது மிகமிக ரஸிக்கத்தக்கது. குந்தலத்திலுள்ள கௌடில்யம் கண்ணாலே காணத்தக்கதாயிருக்கும்; உக்திகளிலுள்ள கௌடில்யம் அப்படிக் கண்ணாலே காணத்தக்கதன்று; அதன் ஸ்வரூபமும் இத்தகையதன்று. ஆகவே குந்தலநிஷ்ட கௌடில்யத்திற்கு குப்யச் சோளீவசநநிஷ்ட கௌடில்யத்தை த்ருஷ்டாந்தமாகக் கூறியது கேவலம் சப்தத: என்று கொள்ளக்கடவது. குப்யச் சோளீ வசனமும் குடிலம், அரங்கனுடைய திருக்குழல்கற்றையும் குடிலம் என்று இங்ஙனே சப்தத: (शब्दत:) சொல்லக் குறையில்லை யென்றுணர்க. இங்கே ஒரு ஐதிஹ்யம் கர்ணபரம்பராப்ராப்தமானதுண்டு; (அதாவது) தேசிகன் முதன் முதலாகத் திருவரங்கம் பெரிய கோயிலுக் கெழுந்தருளினபோது அங்கு ஒருவரும் பரிசிதரில்லாமையினாலே ஒரு திருமாளிகையிலே புகுந்து "இங்கே என்னுடைய ஸாமக்ரிகளை வைத்துவிட்டுத் திருக்காவேரிக்குப் போய்வருகிறேன்; சிறிது அவகாசம் தரலாமோ?" என்று கேட்க, அத்திருமாளிகையிலிருந்த பெண்பிள்ளை ஸ்வாமியின் ப்ரபாவத்தை யறியாதவளாகையாலும் * न विषेण न शस्त्रेण नाग्निना न च मृत्युना । अप्रतीकारपारुष्या: स्त्रीभिरेव स्त्रिय: कृता:— ந விஷேண ந சஸ்த்ரேண நாக்நிநா ந ச ம்ருத்யுநா, அப்ரதீகார பாருஷ்யா: ஸ்த்ரீபிரேவ ஸ்த்ரிய: க்ருதா: * என்னும்படியான ஸஹஜக்ரௌர்யத்தாலும் வடுக்கென்று சில வார்த்தைகள் சொல்ல, உடனே ஸ்வாமி அவ்விடம்விட்டு அகன்று போயினர்; அப்பெண்பிள்ளையின் வசந கௌடில்யம் திருவுள்ளத்திலேயே ஊறிக் கிடந்ததனால் அது இந்த ஸ்துதியில் நல்ல ஸந்தர்ப்பத்தில் ஸ்ம்ருதமாகி இங்ஙனே விநியோகிக்கப்பட்டதென்று. சோளீ என்றது சோழநாட்டுப் பெண் பிள்ளைகள் என்றபடி. ஆக இப்படிப்பட்ட திருக்குழல்கற்றையின்மீது அணியப்பட்டது திருவபிஷேகம் என்ற கருத்தில் "குந்தலை: ச்லிஷ்டமூலே" என்றது.

திருவபிஷேகம் இன்னமும் எங்ஙனே பிரகாசின்றதென்ன, [ரத்நபீடத்யுதி சபலிதே] கிரீடத்தின்மீது சாத்தப்பட்டுள்ள ரத்நமயமானவொரு சிகாபரணம்

ரத்நாபீடமெனப்படுகிறது. அதினின்று பரம்பின நாநாவர்ண கிரணங்களினாலே சபளிதமாயிராநின்றதாம். இப்படிப்பட்ட [ரங்கபர்த்துஃ கிரீடே] ஸ்ரீரங்கநாதனுடைய திருவபிஷேகத்திலே [ஸ்திதிம் அதிகதாஃ மே சேதஸோ வ்ருத்தயஃ] * பரந்த சிந்தை யொன்றி நின்று * என்று திருமழிசைப் பிரானருளிச் செய்கிறபடியே கண்டவிடமெங்கும் கால் தாழ்ந்து திரிந்துழன்று கொண்டிருந்த என்னுடைய சேதோவ்ருத்திகளானவை இப்போது அணியரங்கனுடைய * கதிராயிரமிரவி கலந்தெரித்தாலொத்த நீண்முடியிலே ஊன்றி நின்றதாகி—வேறு போக்கிடமற்றதாகி. [ராஜந்வத்யஃ அபூவந்] அராஜகமாயிருக்குமிருப்புத் தவிர்ந்ததென்றபடி. அராஜகமானவிடத்தில்தானே கேட்பாரற்றுப் பட்டி மேய்ந்து திரியலாகும். ஸுராஜகமான விடத்தில் அப்படி ஸ்வச்சந்த விஹாரம் செய்ய முடியாதன்றோ. ஆகவே தம்முடைய சித்தவ்ருத்தியின் ஸ்வைர ஸஞ்சாரம் தவிரும்படி பண்ணிற்றுத் திருவரங்கநாதனுடைய திருவபிஷேக மென்றாராயிற்று. सुराज्ञि देशे राजन्वानिखमरः॥ (௯)

प्रादाम्भोजं स्पृशति भजते रङ्गनाथस्य जङ्घाम् ऊरुद्वन्द्वे विलगति शनैरूर्ध्वमभ्येति नाभिम् ।
वक्षस्यास्ते वलति भुजयोर्मामिकेयं मनीषा वक्त्राभिख्यां पिबति वहते वासनां मौलिबन्धे ॥ १० ॥

**பாதாம்போஜம் ஸ்ப்ருசதி பஜதே ரங்கநாதஸ்ய ஜங்காம்**
**ஊருத்வந்த்வே விலகதி சனைரூர்த்வமப்யேதி நாபிம்,**
**வக்ஷஸ்யாஸ்தே வலதி புஜயோர் மாமிகேயம் மநீஷா**
**வக்த்ராபிக்க்யாம் பிபதி வஹதே வாஸநாம் மௌலிபந்தே.** (௰)

| | | | |
|---|---|---|---|
| மாமிகா இயம் மநீஷா | என்னுடையதான இந்த புத்தியானது | வக்ஷஸி ஆஸ்தே | (பிறகு) திருமார்பிலே தங்குகின்றது ; |
| ரங்கநாதஸ்ய | ஸ்ரீரங்கநாதனுடைய | புஜயோஃ வலதி | புஜங்களிலே சுழலமிடுகின்றது ; |
| பாத அம்போஜம் ஸ்ப்ருசதி | திருவடித்தாமரையை அவகாஹிக்கின்றது ; | வக்த்ர அபிக்க்யாம் பிபதி | திருமுக மண்டலத்தின் சோபையைப் பருகுகின்றது ; |
| ஜங்காம் பஜதே | (பிறகு) திருக்கணைக்காலை பக்தியுடன் ஸேவிக்கின்றது ; | மௌலிபந்தே வாஸநாம் வஹதே | சிகா பந்தத்திலே திடமான ஸம்ஸ்காரத்தை வஹிக்கின்றது. |
| ஊருத்வந்த்வே சனைஃ விலகதி | (பிறகு) திருத்துடையிணையில் மெதுவாக ஊன்றுகின்றது ; | | |
| ஊர்த்வம் நாபிம் அப்யேதி | (பிறகு) மேலே திருநாபியை யணுகாநின்றது ; | | |

* * * கீழ் ஒன்பது ச்லோகங்களினால் ஒவ்வொரு திவ்யாவயவத்தின் சோபையையும் தனித்தனியே அநுபவித்துப் போந்தவர், அங்ஙனே ப்ரத்யேக மநுபவித்த ஸகலாவயவங்களினுடையவும் அழகை இதில் ஒருசேரவநுபவித்து இனியராகிறார். திருவாய்மொழியில் * ஏழையராவியுண்ணுமென்கிற பதிகத்திலே திருக்கண், திருமூக்கு, திருவதரம், திருப்புருவம், திருமுறுவல், திருச்செவி, திருநுதல் என்னுமவயவங்களைத் தனித்தனியே ஒவ்வொரு பாட்டாலேயநுபவித்து, * கோளிழைத் தாமரையுமென்கிற எட்டாம்பாட்டில் கீழநுபவித்த அவயவங்களையெல்லாம் ஒருசேரத்திரட்டி யநுபவித்தாரிறே. அவ்விடத்து ஈட்டில் நம்பிள்ளை ரஸகனமாக அவதாரிகையிட்டருளினர் ; எங்ஙனேயென்னில்;—" அங்குமிங்கும் சிதறிக்கிடந்த படையை, சத்ருக்கள் வந்து முடுகினவாறே ஒன்றாகத்திரட்டி ஒருகாலே தள்ளுவாரைப்போலே தனித்தனியே நலிந்த அழகுகளெல்லாம் திரளவந்து நலிகிறபடியைச் சொல்லுகிறார் " என்று ; அவ்விடம் ஆழ்வார் நலிவுபடுகிறவிடமாகையாலே அங்கு அங்ஙனே சொல்லவேண்டிற்று. இங்கு நலிவுபடுகையன்றிக்கே * ஸம்ப்ரீணாதி * என்றும் * நிர்விசதி * என்றும் உகந்து சொன்னவிடமாகையாலே பரமப்ரீதியோடே அநுபவம் சொல்லாநின்றபடி.

திருவடிதொடங்கித் திருமுகமண்டலத்தளவும் முக்க்யமான திவ்யாவயவங்களிலே திருவுள்ளமீடுபடுகிறபடியை அருளிச்செய்து போருகிறார். திருவடித் தாமரையிலே நன்றாகப்படிந்தால் *தாள் கண்டார் தாளே கண்டார்* என்றபடி அவ்வருகுபோக அவகாசமிராதாகையாலே [பாதாம்போஜம் ஸ்ப்ருசதி] என்றார். திருவடியில் ஸ்பர்சமாத்ரமேயாயிற்று. [ஜங்காம் பஜதே] ப்ரீதிபூர்வக ஸேவநம் சொன்னபடி. ஆரம்பத்தில் ஜங்கையிலீடுபட்டுப் பேசுகையில் *மதாத்மா—ரங்கபர்த்துஃ ஜங்காம் த்ருஷ்ட்வா ஜநகபதவீ ஜாங்கிகத்வம் ஜஹார்தி* என்று சொன்னவராகையாலே ஸம்ஸார விமோசனம் பண்ணிவைத்த விடத்திலே பக்திபண்ண ப்ராப்தமிறே. [ஊருத்வந்த்வே சநைஃ விலகதி.] திருத்துடையிணையில் மெதுவாகப் படிகின்றதாம். கீழே திருத்துடையிலீடுபடும்போது *கமலாபூமி நீலோபதாநம்* என்று சொன்னவராகையாலே திருவடிவருடின தேவிமார்கள் ச்ரமத்தினாலே அயர்ந்து கண்வளர்ந்தருளுமிடத்திலே நித்ராபஞ்ஜகமாகக் கோலாஹலம் பண்ணாதே மெதுவாக வர்த்திக்கிறதென்கிறார். [நாபிம் ஊர்த்வம் அப்யேதி.] கம்பீரமான திருநாபியானது மிகப்பெரிய சுழிபோன்றிருக்கையாலே அங்கு அணுகுவதற்கு அஞ்சி சுற்றி வலம் வந்து மேலெழச் செல்லுகிறபடி. [வக்ஷஸி ஆஸ்தே.] திருமார்பு திருத்தாயாருறையுமிடமாகையாலே அங்கு நிர்ப்பயமாக விச்ராந்தி பெறுகின்றதாயிற்று. [வலதி புஜயோஃ] திருத்தோள்களுக்கடுத்தபடி திருமுக மண்டலமன்றோ வுள்ளது; அதுதன்னிலே அநுபாவ்ய விஷயங்கள் அப்ரிமிதங்களாயிருக்கையாலே விலக்ஷணமான அவ்வநுபவம் உடனே ப்ராப்தமாகப் போகிறதென்னும் குதூஹலாதிசயத்தினாலே, வண்டுகள் தாமரை மலரினுள்ளே ஸஹஸா இறங்காதே மேலே சுழலமிடுமாபோலே இங்கும் புஜபரிஸரத்திலே சுழலமிடுகின்றபடி.

[வக்த்ராபிக்க்யாம் பிபதி] திருத்தோள்களிலே சுழலமிட்டதனாலுண்டான விடாய்தீர "லோசநாப்யாம் பிபந்நிவ" என்றாப்போலே திருமுகமண்டல சோபையைப்பருகி விடாய்தீர்ந்தபடி. *ஹரிஸரஸி விகாஹ்யாபீய தேஜோஜலௌகம் பவமரு பரிகிந்நஃ கேதமத்ய த்யஜாமி* என்ற முகுந்தமாலா ச்லோகத்தை இங்கே நினைப்பது. [மௌலிபந்தே வாஸநாம் வஹதே.] *முற்றவிம் மூவுலகும் விரிகின்ற சுடர் முடிக்கே ஒற்றுமைக்கொண்ட துள்ளம்* என்ற திருவாய்மொழிப் பாசுரம் இங்ஙனே வடிவெடுத்தபடி. ... ... (ய)

कान्तोदारैरयमिह भुजैः कङ्कणज्याकिणाङ्कैर्लक्ष्मीधाम्नः पृथुलपरिघैर्लक्षिताभीतिहेतिः ।
अग्रे किञ्चिद्भुजगशयनः स्वात्मनैवात्मनः सन् मध्येरङ्गं मम च हृदये वर्तते सावरोधः ॥ ११ ॥

காந்தோதாரை ரயமிஹ புஜைஃ கங்கணஜ்யா கிணாங்கைஃ
லக்ஷ்மீதாம்நஃ ப்ருதுல பரிகைர் லக்ஷிதாபீதி ஹேதிஃ
அக்ரே கிஞ்சித் புஜகசயநஃ ஸ்வாத்மநைவாத்மநஸ் ஸந்
மத்யேரங்கம் மமச ஹ்ருதயே வர்த்ததே ஸாவரோதஃ (கக)

| | | | |
|---|---|---|---|
| இஹ | இத்தலத்திலே | அயம் புஜகசயநஃ | இப்பெரிய பெருமாள் |
| காந்த உதாரைஃ | அழகியவாயும் உதாரங்களாயும் | கிஞ்சித் அக்ரே | சிறிதுமுன்னே |
| கங்கண ஜ்யா கிண அங்கைஃ | கரபூஷணங்கள் போன்ற நாணித்தழும்பின்சுவடு உடையனவாயும் | ஸ்வாத்மநைவ ஆத்மநஃ ஸந் | தாமே தம்மில் தோன்றி நின்று [மூலமூர்த்தியில் நின்று தோன்றின உத்ஸவ மூர்த்தியாய் நின்று என்றபடி.] |
| லக்ஷ்மீ தாம்நஃ ப்ருதுல பரிகைஃ | பெரிய பிராட்டியாருடைய லீலாக்ருஹமான திருமார்புக்குப்பருத்த சேமக்காப்பு போன்றவையாயுமுள்ள | ஸாவரோதஃ | பெரிய பிராட்டியாரோடுங் கூடியவராய் |
| புஜைஃ | புஜங்களினாலே | மத்யேரங்கம் | ஸ்ரீரங்கமத்யத்திலும் |
| லக்ஷித அபீதி ஹேதிஃ | அபயமளிக்கும்திவ்யாயுதங்களையுடையவரான | மம ஹ்ருதயே ச வர்த்ததே | என்னுள்ளத்தினுள்ளும் எழுந்தருளியிருக்கிறார். |

***கீழ் ச்லோகங்களெல்லாம் மூல மூர்த்தியான பெரிய பெருமாளையநுபவித்துப் பேசினவை; இந்த ச்லோகத்தினால் நம்பெருமாளான உத்ஸவ மூர்த்தியையும் சேர்த்து அநுபவிக்கிறபடி. பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ பூர்வசதகத்திலே ***ஸ்ரீரங்காந்தர் மந்திரம்*** என்னும் அறுபதாவது ச்லோகத்தினால் கர்ப்பக்ருஹத்தை யநுபவித்து, அடுத்த இரண்டு ச்லோகங்களினால் பாதஸம்வாஹிநிகளையும் சாமரக்ராஹிணிகளையும் தொழுது, அதற்குமேல் *உத்புல்லபங்கஜதடாகமிவ* என்கிற அறுபத்து மூன்றாம் ச்லோகம்முதல் பதினான்கு ச்லோகங்களினால் உத்ஸவ மூர்த்தியை யநுபவித்து, பிறகு ***ஸ்வபணவிதாநதீப்ரேத்யாதி**யாலே பெரிய பெருமாளுடைய அநுபவத்திலே செல்லுகிறார். ஆழ்வார்களும் மற்றுள்ள ஆசார்யர்களும் மூலமூர்த்தியென்றும் உத்ஸவமூர்த்தியென்றும் பிரித்துக் காட்டாதே பொதுவாக அநுபவித்துப் போருவர்கள். ஆனாலும் பெரும்பாலும் பெரிய பெருமாளநுபவமேயாயிருக்கும். இந்த ச்லோகத்தில் "**கிஞ்சிதக்ரே ஸ்வாத்மநைவ ஆத்மநஸ்ஸந்**" என்றது உத்ஸவ மூர்த்தியையே. மூர்த்தி பேதமாகக் காணப்பட்டாலும் உண்மையில் தாமே தம்மில்நின்று வெளிப்பட்டு நிற்கிறபடியாகையாலே பேதமில்லாமையைக் காட்டினபடி.

*கையினார் சுரிசங்கனலாழியர்... அணியரங்கனார் அரவினணைமிசைமேய மாயனார்* என்ற பாண்பெருமாளருளிச் செயலில் நோக்காகப் பூர்வார்த்தமருளிச் செய்தபடி. ஸ்ரீரங்கநாதனுடைய புஜங்களுக்கு மூன்று விசேஷணங்களிட்டருளுகிறார் **காந்தோதாரை:, கங்கண ஜ்யாகிணாங்கை:, லக்ஷ்மீதாம்ந: ப்ருதுலபரிகை:** என்று. *அலம்புரிந்த நெடுந்தடக்கையாகையாலே **காந்தோதாரை:** என்றது. *சகாஸதம் ஜ்யாகிணகர்க்கசைச் சுபைச் சதுர்ப்பிராஜாநுவிலம்பிபிர் புஜை:* என்ற ஆளவந்தார் ஸ்ரீஸூக்தியையும்' *ஜ்யாகிணாங்க பரிகர்மதர்மிணோ பாந்தி ஸுந்தரபுஜஸ்ய பாஹவ:* என்ற ஆழ்வான் ஸ்ரீஸூக்தியையுமடியொற்றி ***கங்கணஜ்யாகிணாங்கை:*** என்றது. *தழும்பிருந்த சார்ங்கநாண் தோய்ந்தவாம் அங்கை* என்ற பொய்கையார் பாசுரம் இவற்றுக்கெல்லாம் மூலமாயிருக்கும். விபவாவதாரங்களிலுண்டான நாணித்தழும்பு அர்ச்சையிலும் அநுவர்த்திக்கிறபடி.

[**லக்ஷ்மீதாம்ந: ப்ருதுலபரிகை:**] *பூவார் திருமாமகள்புல்கிய மார்பனாகையாலே பெரிய பிராட்டியாருக்குக் கோயில் கட்டணமான திருமார்புக்கு மிகப்பெரிய சேமக்காப்பு சாத்தினாப்போலேயிரா நின்றன வென்கை. இப்படிப்பட்ட திருக்கைகளில் பூவேந்தினாற்போலே திவ்யாயுதாழ்வார்களை ஏந்திக்கொண்டு மங்களாசாஸநபரர்களுக்கு அச்சங்கெடுப்பவர் அணியரங்கர் என்கிறது **லக்ஷிதாபீதிஹேது:** என்பதனால். இப்படிப்பட்ட பெரிய பெருமாளும் நம் பெருமாளும் பிராட்டியாரோடு கூட ஸ்ரீரங்கவிமானத்தில் மட்டும் எழுந்தருளியிருக்கவில்லை, என்னுள்ளத்துள்ளும் உறைகின்றார் என்றாராயிற்று. இது ஸம்ஸித்த யோகஸ்திதியைச் சொன்னபடி. ... .... (கக)

रङ्गास्थाने रसिकमहिते रञ्जिताशेषचित्ते विद्वत्सेवाविमलमनसा वेङ्कटेशेन क्लृप्तम् ।
अक्लेशेन प्रणिहितधियामारुरुक्षोरवस्थां भक्तिं गाढां दिशतु भगवद्ध्यानसोपानमेतत् ॥ १२ ॥

**ரங்காஸ்தாநே ரஸிகமஹிதே ரஞ்ஜிதாசேஷசித்தே**
**வித்வத்ஸேவா விமலமநஸா வேங்கடேசேந க்லப்தம்**
**அக்லேசேந ப்ரணிஹிததியாம் ஆருருக்ஷா ரவஸ்தாம்**
**பக்திம் காடாம் திசது பகவத்த்யாந ஸோபாநமேதத்.** (கஉ)

| | |
|---|---|
| ரஸிக மஹீதே | ரஸிகர்களால் ப்ரதிஷ்டை பெற்ற விடமாயும் |
| ரஞ்ஜித அசேஷ சித்தே | எல்லாருடைய ஹ்ருதயத்தையும் உகப்பித்த தாயுமிருக்கின்ற |
| ரங்க ஆஸ்தாநே | திருவரங்கம் பெரிய கோயிலிலே |
| வித்வத்ஸேவா விமல மநலா | வித்வான்களை யடிபணிந்து மனத்தூய்மை பெற்றவரான |
| வேங்கடேசே | ஸ்ரீமத்வேங்கடநாதார்யராலே |
| க்லுப்தம் | இயற்றப்பட்டதான |
| ஏதத் பகவத்த்யாந ஸோபாநம் | பகவத்த்யாந ஸோபாநமென்னுமிந்த ஸ்துதியானது |
| ப்ரணிஹிததியாம் அவஸ்தாம் அக்லேசேந ஆருருக்ஷோ: | ஸமாஹிதமநஸ்கர்களின் நிலைமையை எளிதாக அடையவிரும்புமவனுக்கு |
| காடாம் பக்திம் திசது | ஆழ்ந்த பக்தியை அளித்திடுக. |

*** இந்த ஸ்துதிக்ருதிக்குப் பலன் சொல்லித் தலைக்கட்டுகிறாரிதில். இதற்கு ஸோபாநமென்று திருநாமமிட்டதற்குப் பொருத்தமாகப் பலனுரைக்கப்பட்டது. கீழிருந்து மேலே ஏற நினைப்பார்க்கு ஸோபாநம் [படிக்கட்டு] உதவும்; ஸ்துதி ரூபமான இந்த ஸோபாநமும் யோகஸித்தியிலே ஆருருக்ஷுக்களுக்கு உதவுமென்கிறது. 'ஆருருக்ஷோ:' என்று ஜாத்யேகவசநம். ஜநஸ்ய என்று பூரித்துக் கொள்வது.

ஸ்வாமிதேசிகன் * முத்திதரும் நகரேழில் முக்கியமாங்கச்சிதன்னில் திருவவதரித்து * அடியவர்க்கு மெய்யனாகிய தெய்வநாயகன் திருப்பதியான திருவயிந்திரபுரத்திலே வெள்ளைப்பரிமுகருடையவும் வைநதேயருடையவும் நிரவக்ரஹாநுக்ரஹத்தைப் பெற்று *க்வசந ரங்க முக்யே விபோ' பரஸ்பரஹிதைஷிணாம் பரிஸரேஷு மாம் வர்த்தய " [அபீதிஸ்தவே] என்று ப்ரார்த்திக்க வேண்டும்படி பரஸ்பரஹிதைஷிகளாய் ரஸிகர்களான வித்வத்ஸார்வபௌமர்கள் வாழுமிடம் திருவரங்கம் பெரிய கோயிலென்று திருச்செவிசாத்தி மஹத்தான அபிநிவேசத்தோடே அங்கேற வெழுந்தருளி ரஸிகவித்வதாசார்ய பாதபரிஸரத்திலே * தத் வித்தி ப்ரணிபாதேந பரிப்ரச்நேந ஸேவயா * என்ற கீதாசார்யோபதேசக் கட்டளையிலே ஸேவை பண்ணி விஹதகல்மஷ சேமுஷீகரானபடியைப் பூர்வார்த்தத்திலே யதாவஸ்திதமாக அருளிச்செய்தாராயிற்று. "வித்வத் ஸேவா" என்ற விடத்திலே ப்ரதிபாதிதர்களான ஸ்ரீரங்கஸ்தல நித்யவாஸி வித்வான்கள் ரஸிகர்களாயும் அசேஷ சித்தரஞ்ஜகர்களாயு மிருந்தார்களென்கிற கருத்தைக்காட்டும் "ரஸிக மஹிதே" "ரஞ்ஜிதா சேஷசித்தே" என்கிற ஸ்ரீரங்கஸ்தலவிசேஷணங்கள்.

அக்லேசேந என்னும் பதம் 'க்லுப்தம்' என்பதிலும் அந்வயிக்கலாமென்று சிலர் கருதக்கூடுமாயினும் அதில் சுவையில்லையென்று விடுக்க. அப்ரஸக்த ப்ரதிஷேத மேதுக்கு? அந்வயக்லேசமுமுண்டே.

நாலாவது பாதத்தில் நிசது என்றும் பாடமுண்டு. பவிஷ்யத்தாகச் சொல்லாதே வர்த்தமாநமாகச் சொல்லுகிறது தேற்றத்தாலே. (கஉ)

இந்த ஸ்துதி முழுவதும் மந்தாக்ராந்தாவ்ருத்தம்.

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம்
அண்ணங்கராசாரியர் இயற்றிய
ஸோபாந தீபிகையென்கிற
பகவத் த்யாந ஸோபாநவுரை முற்றிற்று

கவிதார்க்கிகஸிம்ஹாய கல்யாணகுணசாலிநே,
ஸ்ரீமதே வேங்கடேசாய வேதாந்தகுரவே நம:

ஸ்ரீ:

ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகனருளிச்செய்த

# தசாவதார ஸ்தோத்ரம்.

# ॥ दशावतारस्तोत्रम् ॥

(ஸ்ரீகாஞ்சீ. அண்ணங்கராசாரியர் இயற்றிய

அவதாரரஹஸ்யபோதினியென்னு முரையுடன் கூடியது.

(உரையவதாரிகை)

எம்பெருமான் வேதாந்த சாஸ்த்ரங்களில் ஸகலஜகத்காரண பூதனென்று குலாவப்படுகிறான். அதனால் அவனே ஸர்வஜகத்பிதா வென்றுதேறும். அப்படி ஸர்வலோக பிதாவாயிருக்கச் செய்தேயும் சிலரைப் பிதாவாகக் கொண்டு அவர்களுக்குத் தான் புத்திரனாய் ஜனித்து தசரதாத்மஜ னென்றும் வஸுதேவஸூநு வென்றும் நந்தகோபதநய னென்றும் இங்ஙனே பல திருநாமங்களைப் பெறுகிறான். வேதங்களானவை * अजायमानो बहुधा विजायते * என்றும் *पिता पुत्रेण पितृमान् योनियोनौ *என்றும் ஓதுகின்றன. இன்னமும் * स उ श्रेयान् भवति जायमानः * என்றும் விசேஷித்து ஓதாநின்றது. அவன் பிறக்கப்பிறக்க சாணையிலிட்ட மாணிக்கம்போலே ஒளிமல்கப் பெறுகிறானென்பது இந்த ச்ருதிவாக்யத்தின் கருத்து. இந்த ச்ருதியை நம்மாழ்வாரும் * பல பிறப்பா யொளிவரு முழுநலம் * (திருவாய்மொழி 1-3-2. என்று மொழி பெயர்த்தருளிச்செய்தார். ஸம்ஸாரிகளான நமக்குப் போலே கர்மநிபந்தநமான பிறப்பாகில் பிறக்கப்பிறக்கப் புகரழிந்து நிற்கும்; கருமமடியாகவன்றிக்கே அநுக்ரஹமடியாக அவதரிக்கிறானாகையாலே பிறக்கப் பிறக்கப் புகர் விஞ்சிவளரா நிற்குமவனுக்கு.

ஆழ்வார் *மனிசரும் மற்றும் முற்றுமாய் மாயப் பிறவி பிறந்த *என்னாநிற்கச் செய்தே, உடனே * தனியன் பிறப்பிலி தன்னை * என்றுமருளிச் செய்யாநின்றார். 'பிறந்த' என்றது மெய்யா? 'பிறப்பிலி' என்றது மெய்யா? என்றால், இரண்டும் மெய்தானென்ன வேண்டியதாயிருக்கும். பிறந்தமையும் பிறவாமையுமாகிறவிரண்டும் எங்ஙனே பொருந்தும்படியென்னில்; *ஸஹி தேவை ருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி:, அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞேவிஷ்ணுஸ் ஸநாதந:* என்றும் * ஜாதோஸி தேவதேவேச! சங்க சக்ரகதாதர! * என்றும் சொல்லும்படி மெய்யே பிறந்தருளினானாகையாலே பிறந்தானென்றது பொருந்திற்று. * உன்னடியார்க்கு என் செய்வனென்றேயிருத்தி நீ * (பெரிய திருவந்தாதி) என்கிற கணக்கிலே எத்தனை செய்தும் ஒன்றும் செய்திலனாக நினைக்குந் தன்மையுடையனாகையாலே, பலபடி பிறந்துவைத்தும் பிறக்கப்பெற்றிலோமென்றும் இனிமேல் தான் பிறக்க வேணுமென்றும் நினைத்திருக்குந்தன்மைபற்றிப் பிறவாதவனென்றும் சொல்லப் பொருந்தும். அஸ்மதாதிகளைப்போலே கர்மநிபந்தனமாகப் பிறவாமையாலே பிறந்திலனென்றது என்னவுமாம். எம்பெருமான் செய்தருளும் அவதாரங்களுக்கு ஹேது அவனுடைய இச்சையேயாம். இப்படியவதரிப்போமென்னும் ஸ்வேச்சையொழிய வேறு ஹேதுவில்லை. * ஸம்பவாமி ஆத்மமாயயா * என்று தானேயருளிச் செய்தானிறே கீதையில். 'ஆத்மமாயயா' என்றது ஆத்மேச்சயா என்றபடி. *மாயா வயுநம் ஜ்ஞாநம்* என்றநிகண்டின்படி மாயாசப்தம் ஜ்ஞாநவாசகமாகையாலே இச்சாரூபமான ஜ்ஞானத்தைச் சொல்லுகிறது. * இச்சாக்ருஹீதாபிமதோரு தேஹ:* என்னக்கடவதிறே.

அவதாரங்களுக்கு ப்ரயோஜநமேதென்னில்* பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம், தர்ம ஸம்ஸ்தாப நார்த்தாய ஸம்பவாமி யுகேயுகே* என்று தானேயருளிச் செய்கிறபடியே, தன் பக்கல் ப்ரேமயுக்தராய் தன்னுடைய

அநுபவமொழிய க்ஷணகாலமும் செல்லாதே தன்னைக் காணவேணுமென்றாசைப் பட்டிருக்கும் ஸாது ஜநங்களைத் தன்னுடைய ரூபசேஷ்டிதாவலோகந ஆலாபந தாநமுகத்தாலே ரக்ஷிக்கையும், அவர்களுக்கு விரோதிகளான துஷ்டர்களைத் தொலைக்கையும், தன்னுடைய ஆராதநரூபமாய் க்ஷீணமாய்க்கிடக்கிற வைதிகதர்மத்தை ஆராத்யனான தன் ஸ்வரூபத்தைக் காட்டி ஸ்தாபிக்கையுமாகிற இம்மூன்றுமே அவதார ப்ரயோஜநம்; இவற்றினுள்ளும் ஸாதுபரித்ராணமே பரமப்ரயோஜநமென்றும், அது ஸங்கல்பத்தினால் நிறைவேற்றத் தக்கதன்றிக்கே நேர்கொடு நேரே அவதரித்தே நிறைவேற்றத்தக்கதென்றும் எம்பெருமானார் அருளிச்செய்யும்படி.

"साधवः—उक्तलक्षणधर्मशीला वैष्णवाग्रेसराः मत्समाश्रयणे प्रवृत्ताः मन्नामकर्मस्वरूपाणां वाङ्मनसागोचरतया मद्दर्शनेन विना आत्मधारणपोषणादिकमलभमानाः क्षणमात्रकालं कल्पसहस्रं मन्वानाः प्रशिथिलसर्वगात्रा भवेयुरिति मत्स्वरूपचेष्टितावलोकनालापनादिदानेन तेषां परित्राणाय" என்று கீதாபாஷ்யத்திலும், "साधवो ह्युपासकाः; तत्परित्राणमेवोद्देश्यम्; आनुषङ्गिकस्तु दुष्कृतां विनाशः; संकल्पमात्रेणापि तदुपपत्तेः" என்று அந்தரதிகரண ஸ்ரீபாஷ்யத்திலுமருளிச்செய்தவை இங்கே அநுஸந்தேயம்.

ஆக ஸாதுபரித்ராணத்தை ப்ரதாநோத்தேச்யமாகக்கொண்டு செய்தருளின அவதாரங்கள் *பஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி *உயிரளிப்பான் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்* இத்யாதிப்படியே எண்ணிறந்தவையாயிருக்கச் செய்தேயும் அநுஸந்தான ஸௌகர்யார்த்தமாக தசாவதாரங்களென்று பரிகணிதங்களாயிருக்கும். *பத்தினாய தோற்றமோடு ஓராற்றல்மிக்கவாதிபால்* என்றார் திருமழிசைப்பிரான். *மீனாயாமையுமாய் நரசிங்கமுமாய்க் குறளாய், கானேனமுமாய்க் கற்கியாமின்னங் கார்வண்ணனே* என்று நம்மாழ்வாரும், *தேவுடைய மீனமாயாமையாயேன மாயரியாய்க் குறளாய், மூவுருவிலிராமனாய்க் கண்ணனாய்க் கற்கியாய்* என்று பெரியாழ்வாரும், *மீனோடாமை கேழலரி குறளாய் முன்னுமிராமனாய்த் தானாய்ப்பின்னுமிராமனாய்த் தாமோதரனாய்க் கற்கியுமானான்தன்னை* என்று திருமங்கையாழ்வாருமருளிச் செய்தவைகாண்க.

கண்ணபிரான் கீதையிலே அவதாராத்யாயத்திலே ஸ்வாவதார ஹேதுப்ரயோஜந ப்ரகாராதிகளைச் சொல்லிக் கொடு போய் *ஜந்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்வத:, த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோர்ஜுந! * என்று சொல்லிவைத்தருளினானாகையாலே, அவனுடைய அவதாரங்களிலேயான திவ்ய சேஷ்டிதங்களையநுஸந்திப்பார்க்கு * மீட்சியின்றிவைகுந்தமாநகர் மற்றதுகையதுவே * என்கிறபடியே ப்ராப்யபூமி கைபுகுருமாயிற்று. ஸம்ஸார மருகாந்தாரத்திலே திரிந்துழல்வார்க்கு அவ்வோ அவதார சேஷ்டிதங்களையநுஸந்தித்துப் போதுபோக்குவதிற்காட்டிலும் வேறொன்று தஞ்சமல்லாமையினாலே இந்த திவ்ய சேஷ்டிதங்களையே ஆழ்வார்கள் தம்தம் திவ்யப்ரபந்தங்களிலே சுருக்கியும் பெருக்கியும் பேசியநுபவித்துப் போந்தார்கள். திருவாய்மொழியிலே *பிறந்தவாறும் வளர்ந்தவாறும் * குரவையாய்ச்சியரோடு கோத்ததும்* என்னும் பதிகங்களையநுபவிக்கும்போது 'எல்லாப்பதிகங்களும் இப்புடையிலேதானே அமைந்திருக்கலாகாதோ?' என்று பகவச்சரித்ரரஸிகர்கள் நினைப்பதுண்டிறே. * அது இதுவுது வென்னலாவனவல்ல என்னையுன் செய்கை நைவிக்கும்* என்ற ஆழ்வார் பாசுரத்தை யடியொற்றி * இங்கிதம் நிமிஷிதஞ்சதாவகம் ரம்யமத்புதமதிப்ரியங்கரம்* (ஸுந்தரபாஹுஸ்தவே) என்று ஆழ்வானருளிச்செய்தபடி. அவர் தாம் ஸுந்தரபாஹு ஸ்தவத்திலே * **புச்சோத்புச்சந** * என்கிற ச்லோகம் தொடங்கி * **கல்கிபவிஷ்யந்** * என்கிற ச்லோகமளவாக ஒரு முப்பது ச்லோகங்களாலே தசாவதார சேஷ்டிதங்களையநுபவித்துப் பேசிப் போந்தார். பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தர சதகத்திலே * **மீநகூர்மஸ் த்வம்** * என்று தொடங்கி * **கல்கிதநுர் தரணீம் லகூயிஷ்யந்**

என்னுமளவாகப் பதினைந்து ச்லோகங்களாலே அந்த திவ்ய சேஷ்டிதங்களையே அநுபவித்துப் பேசினர். அவை ஓரவதாரத்திற்கு ஒரு ச்லோகமிடுவது என்கிற நியதியின்றிக்கே ஸ்தவமத்யே அருளிச் செய்யப்பட்டவை. அங்ஙனே நியதி கொண்டு தேசிகனருளிச் செய்ததாயிற்று இந்த தசாவதார ஸ்தோத்ரம். இது சப்தகாம்பீர்யத்தாலும் அர்த்தபுஷ்டியாலும் நிகரற்றிருக்கும். இதற்குப் பலச்ருதியாயமைந்த அந்திம ச்லோகத்திலே * வக்த்ரே தஸ்ய ஸரஸ்வதீ பஹுமுகீ பக்திஃ பரா மாநஸே சுத்திஃ காபி தநௌ திசாஸு தசஸு க்க்யாதிச் சுபா ஜ்ரும்பதே* என்றருளிச் செய்யப்பட்ட த்ருஷ்டபலன்கள் பக்தர்களுக்கு அநுபவஸித்தமாயிருக்கும்.

இதில் முதல் ச்லோகம் மங்கள ச்லோகமாய் அமைந்தது. இரண்டு முதல் பதினோராம் ச்லோகமளவான பத்து ச்லோகங்கள் பத்து அவதாரங்களின் அநுபவமாயமைந்தன. பன்னிரண்டாம் ச்லோகம் தசாவதாரங்களையும் ஒரு சேர்த்தியிலே யிட்டு அநுபவிப்பதாயமைந்தது. நிகமந ச்லோகம் பலச்ருதியாயமைந்தது. * *

அவதாரிகை முற்றிற்று.

ஸ்ரீ:

# ॥ दशावतारस्तोत्रम् ॥

# தசாவதார ஸ்தோத்ரம்

**देवो नः शुभमातनोतु दशधा निर्वर्तयन् भूमिकां रङ्गे धामनि लब्धनिर्भररसैरध्यक्षितो भावुकैः ।**
**यद्भावेषु पृथग्विधेष्वनुगुणान् भावान् स्वयं बिभ्रती यद्धर्मैरिह धर्मिणी विहरते नानाकृतिर्नायिका ॥**

**தேவோ நஃ சுபமாதநோது தசதா நிர்வர்த்தயந் பூமிகாம்**
**ரங்கே தாமநி லப்த நிர்ப்பரரஸை: அத்யக்ஷிதோ பாவுகைஃ**
**யத்பாவேஷு ப்ருதக்விதேஷ்வநுகுணாந் பாவாந் ஸ்வயம் பிப்ரதீ**
**யத்தர்மைரிஹ தர்மிணீ விஹரதே நாநா க்ருதிர் நாயிகா.** (க)

## பதவுரை

| | |
|---|---|
| நாயிகா | ஸ்ரீரங்கநாச்சியார் |
| ப்ருதக்விதேஷு யத் பாவேஷு | யாவனொரு தேவாதிதேவனுடைய பல்வேறு அவதாரங்களிலே |
| அநுகுணாந் பாவாந் | அவ்வவதாரங்களுக்கு ஏற்ற அவதாரங்களை |
| ஸ்வயம் பிப்ரதீ | தானும் எடுத்துக் கொண்டவளாய் |
| நாநாஆக்ருதிஃ | பலவகைப்பட்ட ஆக்ருதிகளையுடையளாய் |
| யத்தர்மைஃ தர்மிணீ | யாவனொரு தேவனுடைய திருக்குணங்களுக்கிணங்கிய திருக்குணங்களையுடையளாய் |
| இஹ விஹரதே | இந்நிலத்தில் விஹாரம் செய்கின்றாளோ; |
| லப்தநிர்ப்பரரஸைஃ பாவுகைஃ | பேரின்ப மெய்திய பரமரஸிகர்களாலே |
| ரங்கே தாமநி | ஸ்ரீரங்கக்ஷேத்ரமாகிற ரங்கஸ்தலத்திலே |
| அத்யக்ஷிதஃ | ஸாக்ஷாத்கரிக்கப் பட்டவனாய் |
| தசதா பூமிகாம் நிர்வர்த்தயந் | தசாவதாரங்களாகிற பத்து வேஷங்களைக் கொண்டவனான |
| ஸஃ தேவஃ | அந்த தேவாதிதேவன் [ஸ்ரீரங்கநாதன்] |
| நஃ சுபம் ஆதநோது | நமக்கு நன்மை பயக்க வேணும். |

*** இந்த முதல் ச்லோகம் இந்த க்ரந்தத்திற்கு மங்களா சரணரூபமாய் அமைந்ததோடு அவதாரங்களைச் செய்தருளின எம்பெருமானுடையவும் பிராட்டியினுடையவும் சேர்த்தியையும் அநுபவிக்கின்றதாக வுள்ளது. எம்பெருமானுடைய திருவவதாரங்கள் நாடகமென்னத் தகும். ரஸிகர்கள் கண்டு களிப்பதற்காக நாடகங்கள் அமைவது வழக்கம். ஒரு நடன் தன்னுடைய மனைவியான நடியோடுகூட வந்து நடித்து, பல பல வேஷங்களைப் பரிக்ரஹித்துக் காட்சி தந்து ப்ரேக்ஷகர்களைக் களிக்கச் செய்வதும் வழக்கம். அங்ஙனமே எம்பெருமாநுகிற நடன் பிராட்டியாகிற நடியோடுகூட வந்து திவ்யதம்பதிகளிருவரும் திருவவதாரங்களைச் செய்து களித்தும் களிப்பித்தும் போருகின்றமையை இந்த ச்லோகத்தினாலருளிச் செய்கிறார். இது இந்த நூலுக்கு அவதாரிகை போலுமமைந்த தாயிற்று.

[**தேவோ நச் சுபமாதநோது.**] தேவ: என்கிற பதம் "திவு - க்ரீடா விஜிகீஷா வ்யவஹார த்யுதி ஸ்துதி மோத மத ஸ்வப்ந காந்தி கதிஷு" என்கிற தாது பாடத்தின்படி க்ரீடை முதலிய பத்துப் பொருள்களைக் கொண்டதாயினும் ப்ரக்ருதத்தில் க்ரீடை யென்கிற பொருளே முக்கியமாக விவக்ஷிதமாயிருக்கும். க்ரீடையாவது லீலை; லீலாவிபூதியாகிற இந்நிலம் தன்னுடைய லீலைக்காகவேயிறே அமைக்கப் பட்டது. * त्वं न्यञ्चद्भिरुदञ्चद्भिः कर्मसूत्रोपपादितैः । हरे विहरसि क्रीडाकन्दुकैरिव जन्तुभिः— த்வம் ந்யஞ்சத்பிருதஞ்சத்பி: கர்மஸூத்ரோபபாதிதை:, ஹரே! விஹரஸி க்ரீடா கந்துகைரிவ ஜந்துபி:. * என்று மஹர்ஷிகளும் * மன்பல்லுயிர்களுமாகிப் பலபல மாயமயக்குக்களால் இன்புறு மிவ்விளையாட்டுடையான் * என்று ஆழ்வாரும் பணித்தது காண்க. ஆண்டாள் தனது திருமொழியிலே இறுதிப் பதிகத்திலே கண்ண பிரானுக்கு இரண்டு விளையாடல்களை யருளிச் செய்தாள்; * பட்டி மேய்ந்தோர் காரேறு பல தேவற்கோர் கீழ்க் கன்றாய் இட்டீறிட்டு விளையாடியிங்கே போதக் கண்டீரே * என்ற பாசுரத்தில் தெரிவித்த விளையாட்டு லௌகிகமானது; * நாட்டைப் படையென்று அயன் முதலாத் தந்த நளிர் மாமலருந்தி வீட்டைப்பண்ணி விளையாடும் விமலன் தன்னைக் கண்டீரே * என்ற பாசுரத்திற் கூறின விளையாட்டு வைதிகமானது. அவன் தான் திருவவதரித்துப் பண்ணின திருவிளையாடல்களைக் கணிசித்தே இங்கு **தேவ:** என்றது. [**ந: சுபம் ஆதநோது.**] தேவன் தன்னுடைய லீலைகளையெல்லாம் நான் தெரிந்து பேசும்படி எனக்கு ஜ்ஞாநபக்திகளைத் தந்தருளவேணு மன்பது உட்கருத்து. 'दशधा - தசதா' என்கிற பதம் இடைநிலைத் தீபகமாய் முன்னும் பின்னும் அந்வயிக்கவுரியது. '**ந: தசதா சுபம் ஆதநோது**' என்றும் '**தசதா பூமிகாம் நிர்வர்த்தயந்**' என்றும் அந்வயமாகக் குறையில்லை. 'தசதா சுபம் ஆதநோது' என்னுமளவில் * எட்டினோடிரண்டெனுங் கயிற்றினால் மனந்தனைக் கட்டி * என்று திருமழிசைப்பிரா னருளிச்செய்தபடியே எட்டுமிரண்டுமான சுபத்தையளிக்க வேணுமென்றபடியாம். அடியேனைப் பத்துடையடியவனாக ஆக்கியருள வேணுமென்கை. [**தசதா பூமிகாம் நிர்வர்த்தயந்**] சைலூஷன் பல வேஷங்களைப் பரிக்ரஹித்து ஆடுமாபோலே பகவானும் பல பல வேஷங்களைப் பரிக்ரஹித்து ஆடியருள்வன். அவற்றிலே ப்ரக்ருதம் தசஸங்க்யையைத் திருவுள்ளம் பற்றினபடி. எம்பெருமான் ஆடினது அயோத்யை மதுரை கோகுலம் முதலானவற்றிலே யானாலும். அந்தத் திருக்கோலங்களோடு திருவரங்கம் பெரிய கோயிலிலே ஸேவைஸாதித்தருளா நின்றபடியாலும், இந்த க்ரந்தத்தைப் பணித்தருள்வது கோயிலிலேயாகையாலும் [**ரங்கே தாமநி**] இத்யாதி யருளிச்செய்கிறபடி. 'ரங்கே தாமநி' என்பதில் ச்லேஷமுள்ளது; நாட்யமாடுமிடத்திற்கும் ரங்கமென்று பெயருண்டே. நாட்யத்தை மஹாரஸிகர்கள் கண்டுகளிப்பர்கள்; இங்கும் அங்ஙனேயாயிருக்கும். இனி உத்தரார்த்தத்தாலே பிராட்டியோட்டைச் சேர்த்தியாலுண்டான ரஸபரிபோஷம் பேசப்படுகிறது.

பட்டர் ஒருவிஷயத்தை ஸ்ரீரங்கநாதனை நோக்கியருளிச் செய்து, அதே விஷயத்தை ஸ்ரீரங்கநாச்சியாரையும் நோக்கியருளிச் செய்தார்; அது வென்னென்னில்; * अनुजनुरनुरूपरूपचेष्टा न यदि समागममिन्दिराऽकरिष्यत् । असरसमथवाऽप्रियंसविष्णु ध्रुवमकरिष्यत रङ्गराज नर्म = அநுஜநுரநு ரூபரூப சேஷ்டா ந யதி ஸமாகமமிந்திராகரிஷ்யத், அஸரஸமதவா அப்ரியம்பவிஷ்ணு த்ருவமகரிஷ்யத ரங்கராஜ நர்ம * என்று [ஸ்ரீரங்கராஜஸ்தவ - உத்தர சதகத்திலே] ஸ்ரீ ரங்கநாதனை நோக்கியருளிச் செய்தார்; ஸ்ரீ ரங்கநாதா! உன்னுடைய திருவவதாரங்கள் தோறும் ஸர்வப்ரகாரத்தாலும் ஏற்றிருக்கின்ற பெரிய பிராட்டியாரும் கூடவே அவதரித்தருளவில்லையானால் உன்னுடைய லீலாவிலஸிதங்களெல்லாம் விரஸமாகியன்றோ கிடக்குமென்றார். இவ்வர்த்தந் தன்னையே ஸ்ரீ குணரத்ந கோசத்தில் ஸ்ரீரங்கநாச்சியாரையும் நோக்கியருளிச்செய்தார்—* यदि मनुजतिरश्चां लीलया तुल्यवृत्तेऽनुजनुरनुरूपा देवि! नावातरिष्यः । असरसमभविष्यन्नर्म नाथस्य मातः!—யதி மநுஜதிரச்சாம் லீலயா துல்யவ்ருத்தேः அநுஜநுரநுரூபா தேவி! நாவாதரிஷ்யः, அஸரஸமபவிஷ்யந் நர்ம நாதஸ்ய மாதः!* என்று, இவ்விரண்டு ச்லோகங்களிலும் ஸம்போதநத்தில் வாசியேயன்றி விஜ்ஞாபனம் செய்த விஷயம் ஒன்றேயாயிற்று. அங்கு வ்யதிரேகமுகேந அருளிச்செய்த விஷயமே இங்கு [* யத்பாவேஷு ப்ருதக்விதேஷு] இத்யாதியால் அந்வயமுகேந அருளிச் செய்யப்படுகிறது. * अजायमानो बहुधा विजायते * என்றும் * बहूनि मे व्यतीतानि जन्मानि * என்றும் * எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாயிமையோர் தலைவா * என்றும் சொல்லுகிறபடியே எம்பெருமான் பலவகைப்பட்ட யோனிகளிலே அவதரிக்குந்தோறும் பிராட்டியும் அங்ஙனே யவதரிக்கும்படியைச் சொல்லிற்று மூன்றாம் பாதத்திலே. * குறட்பிரமசாரியா யவதரித்த வாமநாவதாரத்திலுங்கூட பிராட்டியின் ஸஹயோகம் தவிர்ந்ததில்லையென்று புராணங் கூறும். * कृष्णाजिनेन संवृण्वन् * என்ற புராணோக்தியை யநுஸரித்து ஸ்வாமி தாமே தேஹளீச ஸ்துதியில் * भिक्षोचितं प्रकटयन् प्रथमाश्रमत्वं कृष्णाजिनं यवनिकां कृतवान् प्रियायाः— பிக்ஷோசிதம் ப்ரகடயந் ப்ரதமாச்ரமத்வம் க்ருஷ்ணாஜிநம் யவநிகாம் க்ருதவாந் ப்ரியாயாः* என்றருளிச் செய்தாரிறே. ப்ரஹ்மசர்யாச்ரமத்திலும் திருமார்பைவிட்டு அகலாத பிராட்டியை க்ருஷ்ணாஜிநத்தினால் மறைத்ததாகச் சொல்லிற்று.

அவதாரங்களில் ஸஹயோகம் மட்டுமன்று; எம்பெருமானுடைய திருக்குணங்களோடொத்த திருக்குணங்களுடைமையும் சொல்லுகிறது யத்தர்மை ரித்யாதியால். ஜநகசக்ரவர்த்தி ஸீதாபிராட்டியைத் தாரைவார்த்துத் தரும்போது * सहधर्मचरी तव—ஸஹதர்மசரீ தவ * என்றான். ஸ்ரீராமபிரான் எந்த தர்மத்தை யநுஷ்டிக்க வந்தானோ அந்த தர்மத்திற்குத் துணைபுரியவே பிராட்டி வந்தாளென்கை. அது என்ன தர்மமென்னில், * विदितस्स हि धर्मज्ञः शरणागतवत्सलः— விதிதஸ் ஸ ஹி தர்மஜ்ஞச் சரணாகத வத்ஸலः* என்று பிராட்டிதானே யருளிச்செய்தது கொண்டு இதனை யறியலாம்; சரணாகதபரித்ராணமே பெருமாள் ஏற்றுக்கொண்ட தர்மம்; அது பிராட்டியின் ஸஹயோகமில்லாதவளவில் சிறம்பெற மாட்டாது. "இவள் ஸந்நிதியாலே காகம் தலைபெற்றது, அதில்லாமையாலே ராவணன் முடிந்தான்" [முமுக்ஷுப்படி] என்று பிள்ளை லோகாசார்யருமருளிச்செய்தார். லக்ஷ்மீ ஸஹஸ்ரத்திலும் * த்வய்யேவாயததே க்ருபா ரகுபதேः* என்ற ச்லோகத்தினால் இவ்வர்த்தம் பரக்கப் பேசப்பட்டது. சரணாகத பரித்ராணத்திற்கு இன்றியமையாத திருக்குணங்களின் பாஹுள்யத்தை நோக்கி தர்மைः என்று பஹுவசநப்ரயோக

மாயிற்று. யத்தர்மைஃ தர்மிணீ என்றவிடத்தில் "धान्येन धनवान्" என்றவிடத்திற் போல அபேதார்த்தே த்ருதீயையென்று கொள்ளக்கடவது.

[நாநாக்ருதிஃ] நாநா ஆக்ருதிஃ, நாநா க்ருதிஃ என்று இருவகையும் கொள்ளலாம். பலவகைப் பட்ட ஆக்ருதியை யுடையவள் என்பதும், பலவகைப் பட்ட செயல்களை யுடையவள் என்பதும் முறையே பொருள். .... .... (1)

निर्मग्नश्रुतिजालमार्गणदशादत्तक्षणैर्वीक्षणैः अन्तस्तन्वदिवारविन्दगहनान्यौदन्वतीनामपाम् ।
निष्प्रत्यूहतरङ्गरिङ्गणमिथःप्रत्यूढपाथश्छटाडोलारोहसदोहलं भगवतो मात्स्यं वपुः पातु नः ॥ २ ॥

**நிர்மக்ந ச்ருதிஜால மார்க்கண தசா தத்தக்ஷணைர் வீக்ஷணைஃ**
**அந்தஸ் தந்வதிவாரவிந்தகஹநாநி ஔதந்வதீநாமபாம்,**
**நிஷ்ப்ரத்யூஹ தரங்க ரிங்கண மிதஃ ப்ரத்யூடபாதச்சடா**
**டோலாரோஹ ஸதோஹலம் பகவதோ மாத்ஸ்யம் வபுஃ பாது நஃ.** (௨)

| | | | |
|---|---|---|---|
| நிர்மக்ந ச்ருதி ஜால மார்க்கண தசா தத்த க்ஷணைஃ வீக்ஷணைஃ | (கடலினுள்ளே) முழுகிப் போன வேத ராசிகளைத் தேடுவதில் அவஹிதங்களான திருக்கண்களினால் | நிஷ்ப்ரத்யூஹ தரங்க ரிங்கண மிதஃப்ரத்யூட பாதச் சடா டோலா ஆரோஹ ஸதோஹலம் | தட்டுத் தடங்கலின்றி அலையெறிவதனாலே ஒன்றோடொன்று மோதின ஜல ராசிகளாகிற ஊஞ்சலில் ஏறக் குதூஹலங் கொண்டதுமான |
| ஔதந்வதீநாம் அபாம் அந்தஃ | கடலினது நீரினுள்ளே | பகவதஃ மாத்ஸ்யம் வபுஃ நஃ பாது | பகவானது மத்ஸ்யத்திருமேனியானது நம்மைக் காத்தருளவேணும். |
| அரவிந்த கஹநாநி தந்வத் இவ | தாமரைக் காடுகளையுண்டாக்குவது போன்றிருப்பதும், | | |

* * * மத்ஸ்யாவதாரச் செய்தியை யருளிச்செய்கிறார் இந்த ச்லோகத்தினால். * यो ब्रह्माणं विदधाति पूर्वं यो वै वेदांश्च प्रहिणोति तस्मै * என்கிறபடியே நான்முகனைப் படைத்து அவனுக்கு நால் வேதங்களையும் உபதேசித்தருளியிருந்த காலத்திலே, புருஷ ரூபங்கொண்டு உலாவிக்கொண்டிருந்த அந்த வேதங்களை ஹயக்ரீவனென்னுமோரஸுரன் கவர்ந்துகொண்டு கடலினுள்ளே மறைய, அவற்றை மீட்டுக்கொள்ள சக்தியற்ற பிரமன் * वेदा मे परमं चक्षुः वेदा मे परमं धनम् * கண்ணிழந்தேன் தனமிழந்தேனென்று கதறியழுதவளவிலே திருவுள்ளமிரங்கிய எம்பெருமான் கடலினுள்ளே புக்குத்திளைப்பதற்குப் பாங்கான மீனுருவத்தைப் பரிக்ரஹித்துக் கடலினுள்ளே புகுந்து அவ்வஸுரனை நாடிப் பொருதுகொன்று வேதங்களை மீட்டுக் கொணர்ந்து கொடுத்தருளினானென்பது வரலாறு. இவ்வவதார சரிதம் வேறுவகையாகவும் சொல்லப்படுவதுண்டு; அவ்வகையை * வானோரளவும் முதுமுந்நீர் வளர்ந்தகாலம்* நிலையிடமெங்குமின்றி நெடுவெள்ளமும்பர் * (பெரிய திருமொழி) என்கிற பாசுரங்களிலே திருமங்கையாழ்வாரருளிச் செய்திருக்கக் காணலாம். வேதாந்வேஷணத்திற்காக மத்ஸ்யாவதாரஞ் செய்தருளினபடியை இங்கு அநுபவிக்கிறார். நடாதூரம்மாளும் பரத்வாதிபஞ்சகஸ்துதியில் விபவாவதார சரித்ர ஸங்க்ராஹக ச்லோகத்தில் * **வேதாந்வேஷண** * என்றே தொடங்கியிருப்பது காண்க. இந்த சரித்ரபேதத்தைப் பற்றி இதர க்ரந்தங்களில் விரிய வுரைத்தோம்.

[**நிர்மக்நச்ருதிஜாலேத்யாதி.**] கடலினுள்ளே மூழ்கிப்போன வேதராசிகளைத் தேடுவதற்காக அங்கே புகுந்து திருக்கண்களைத் திறந்து கடாக்ஷவீக்ஷணங்களை எங்கும் பரப்புகிறபோது கடலினுள்ளே தாமரைக்காடு பூத்தது போலாயிற்று. * கண்ணிணையுமரவிந்தம் * என்கிறபடியே எம்பெருமானுடைய திருக்கண்கள் செந்

தாமரைமலர்களே யாதலால் கடல்முழுவதும் தாமரைக் காடாகவே பரிணமித்தது போலும். தடாகங்களிலே தாமரை பூப்பதுண்டேயல்லது கடலில் தாமரை பூப்பது அஸம்பாவிதம்; அஸம்பாவிதங்களையும் ஸம்பாவிதமாக்குவதுதானே அகடித கடநாசக்தனுடைய பணி. நிர்மக்ந என்றது 'நிச்சேஷமக்ந' என்றபடி. उदन्वत इमाः—औदन्वत्यः ; तासाम्—औदन्वतीनाम् इति तद्धितवृत्तिः ॥

[நிஷ்ப்ரத்யூஹதரங்கேத்யாதி.] கடலில் அலைகளின் கொந்தளிப்பு இயற்கையானது; எம்பெருமான் கொண்ட மீனுருவம் ஸாமான்யமானதன்றே. மஹத்தர மத்ஸ்ய ரூபங்கொண்டு கடலினுள் இங்குமங்கும் திளைக்கும்போது அலைவரிசைகள் அபரிமிதமாகக் கிளர்ந்து அவை ஒன்றோடொன்று மோதி ஏறுவதும் இறங்குவதுமாயிருக்குமே. அதிலே மத்ஸ்யபகவான் ஊசலாடலாமென்று திருவுள்ளம்பற்றி, வேதராசிகளைக் கைக்கொண்ட பிறகுங்கூட நெடும்போது அந்த டோலோத்ஸவத்தில் உத்கண்டாதிசயத்தாலே அதிலேயிருந்து ஊசலாடி யானந்தித்திருந்தபடியை ஸ்வாமி தாம் தம்முடைய ப்ரத்யக த்ருஷ்டியாலே ஸாக்ஷாத்கரித்தருளிச் செய்தாராயிற்று. ... ... ... ... (2)

अव्यासुर्भुवनत्रयीमनिभृतं कण्डूयनैरद्रिणा निद्राणस्य परस्य कूर्मवपुषो निःश्वासवातोर्मयः ।
यद्विक्षेपणसंस्कृतोदधिपयःप्रेङ्खोलपर्यङ्किकानित्यारोहणनिर्वृतो विहरते देवः सहैव श्रिया ॥ ३ ॥

**அவ்யாஸுர் புவநத்ரயீம் அநிப்ருதம் கண்டூயநைரத்ரிணா**
**நித்ராணஸ்ய பரஸ்ய கூர்மவபுஷோ நிச்ச்வாஸ வாதோர்மய:,**
**யத்விக்ஷேபண ஸம்ஸ்க்ருதோததிபய: ப்ரேங்கோள பர்யங்கிகா**
**நித்யாரோஹண நிர்வ்ருதோ விஹரதே தேவஸ் ஸஹைவ ச்ரியா.** (௩)

| | |
|---|---|
| அத்ரிணா அநிப்ருதம் கண்டூயநை: | மத்தாக நாட்டிய மந்தரமலையினாலே ஓயாது தினவு சொறியப் பெறுதலால் |
| நித்ராணஸ்ய | நித்ராஸுகமநுபவித்த |
| கூர்ம வபுஷ: பரஸ்ய | கூர்மரூபத்தை ஏற்றுக் கொண்ட பரம்புருஷனுடைய |
| நிச்ச்வாஸ வாத ஊர்மய: | கொறட்டைவிடும் மூச்சுக் காற்றின் பரம்பரைகள் |
| புவநத்ரயீம் அவ்யாஸு: | மூவுலகையும் காத்தருள்க; |

(அந்த மூச்சுக் காற்றுகளின் பெருமை உத்தரார்த்தத்தினால் பேசப்படுகிறது.)

| | |
|---|---|
| யத் விக்ஷேபண ஸம்ஸ்க்ருத உததி பய: ப்ரேங்கோள பர்யங்கிகா நித்யாரோஹண நிர்வ்ருத: தேவ: | எந்த மூச்சுக் காற்றுகளின் கிளர்ச்சியினால் அசைகின்ற கடலின் நீராகிற அசை கட்டிலில் நிச்சலுமேறியிருந்து ஆனந்தாநுபவம் செய்தருளாநின்ற எம்பெருமான் |
| ச்ரியா ஸஹைவ விஹரதே | பெரிய பிராட்டியாரோடு கூடவே விஹாரம் செய்தருளாநின்றானே. |

[ததாவிதா: நிச்ச்வாஸவாதோர்மய: புவந த்ரயீம் அவ்யாஸு: என்று யோஜிப்பது.]

*** கூர்மாவதாரச் செய்தியை யநுபவித்துப் பேசுகிறார் இந்த ச்லோகத்தில். கீழ் ச்லோகத்தில் மத்ஸ்ய பகவானுடைய திருமேனியை வருணித்தார்; அங்ஙனே இதில் கூர்ம பகவானுடைய திருமேனியை வருணிக்கலாமே; அதைவிட்டு கூர்ம ரூபியான பகவானுடைய கொறட்டையை வர்ணிக்கப் புகுந்து கவிஸமய ஸரணியிலே ஆச்சரியமாக வருளிச்செய்கிறார்.-[**நித்ராணஸ்ய கூர்மவபுஷ: பரஸ்ய நிச்ச்வாஸ வாதோர்மய: புவநத்ரயீம் அவ்யாஸு:**] என்கிறார். துர்வாஸச் சாபத்தாலே தேவேந்திரனுடைய செல்வமெல்லாம் கடலிலே புக்கொளிக்க, திருமால் கடலைக் கடைந்து அமரர்கட்கு அமுதமளிக்க வேண்டியதாயிற்று. மந்தரமலையை மத்தாக நாட்டி வாஸுகி நாகத்தைக் கடைகயிறாகப் பூட்டிக் கடைய நேர்ந்தது. அப்போது மந்தரம் கடலில் அழுந்தாதபடி பகவான் கூர்மரூபியாய் அம்மலையைத்

தாங்கியிருக்க வேண்டியதாயிற்று. ஆமைகளுக்கு இயற்கையில் முதுகிலே தினவு உண்டு. ஜாதிப்ரயுக்தமான அந்தத் தினவு கூர்ம பகவானுக்கு முண்டு போலும். “மன்னும் வடமலையை மத்தாக மாசுணத்தால், மின்னுமிரு சுடரும் விண்ணும் பிறங்கொளியும், தன்னினுடனே சுழலமலை திரித்து” [பெரிய திருமடல்] என்கிறபடியே தன்மீது மலை திரிக்கும்போது திருமுதுகில் தினவு தீருவதற்குப் பாங்காயிருந்த தனாலே இன்பமாகத் திருக்கண்வளர்த்தி யுண்டாயிற்று; அதனால் கொறுட்டையும் தோன்றிற்றாகக் கொள்வது. கொறுட்டை யுண்டாம்போது காற்று வீசுமே. அந்தக் காற்றின் பரம்பரைகள் மூவுலகையும் காக்க வேணுமென்று சொல்லுகிற விதன் கருத்து என்னென்னில்; அந்த மஹா கூர்மத்திற்கு மந்தரமலையைத் தாங்குவதும் அம்மலை கனவேகமாகச் சுழன்று வருவதும் ஈஷத்தும் ச்ரமமாக இருந்ததில்லையென்றும், பேரின்பமாகவே யிருந்ததென்றும் சொன்னபடி. இந்தக் கூர்மாவதாரத்தைத் திருமங்கையாழ்வாரருளிச் செய்கையில் “செருமிகுவாளெயிற்ற வரவொன்று சுற்றித் திசைமண்ணும் விண்ணுமுடனே, வெருவரவெள்ளை வெள்ள முழுதுங் குழம்ப இமையோர்கள் நின்று கடையப், பருவரையொன்று நின்று முதுகிற் பரந்து சுழலக் கிடந்து **துயிலும்**, அருவரையன்ன தன்மை யடலாமையான திருமால் நமக்கோரரணே * என்னும் பாசுரத்தில் “**கிடந்து துயிலும்**” என்று மஹா கூர்மம் நித்திரை செய்தமை சொல்லிற்று; தத்காரியமான கொறுட்டையும் சொல்லிற்று இங்கு. அமலனாதிபிரானில் “கோவலனாய் வெண்ணெயுண்டவாயன் - அண்டர்கோனணியரங்கன்” என்றவிடத்திற்கு பட்டரருளிச் செய்வராம்—“கோவலனாய் வெண்ணெயுண்டது அழகிய மணவாளனேயோ வென்னுமிடத்தில் ஸந்தேஹம் வேண்டா; பெரிய பெருமாளுடைய கொறுட்டையை மோந்து பார்த்தால் மொச்ச நாற்றம் நாறுங்கிடீர்” என்று. இதனால் நம் ஆசாரியர்கள் எம்பெருமானுடைய திருக்கண் வளர்த்தியைக் கொறுட்டையளவாக அநுபவிப்பர்களென்பது பெறலாகும்.

இனி உத்தரார்த்தத்தாலே * விண்ணவரமுதுண அமுதில் வரும் பெண்ணமுதுண்ட வெம்பெருமானே * என்று கலியனும் “* फलेऽहिहिं कमलाभमेन सर्वः श्रमः” என்று பட்டருமருளிச் செய்தவற்றை யநுஸந்தித்து மிகவினிதாகவருளிச் செய்கிறார். தேவர்களுக்கு உப்புச் சாறான அமிருதத்தைக் கொடுத்தருளினதோடு நில்லாமல், தான் * மதுரக் கொழுஞ்சாறு கொண்டவனாகையாலே, மதுரக்கொழுஞ்சாறான பிராட்டியும் தானும் மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேலேறி நித்தியானந்த மநுபவிக்கிறபடியை யருளிச்செய்கிறாராயிற்று. [**யத்விக்ஷேபணே**' த்யாதி.] யச் சப்தத்தாலே கீழ்ப்ரஸ்துதமான நிச்வாஸ வாதோர்மியை க்ரஹிப்பது; அவற்றினுடைய விக்ஷேபணமாவது - எங்கும் பரவுதல். அதனாலே கடல்நீர் ஏறுவதும் இறங்குவதுமா யிருந்தது. குறட்டை விடும்போது ஒரு காற்று வெளியே வருவதும், ஒரு காற்று உள்ளே போவதுமாயிருக்குமே. அதற்கிணங்கக் கடல் நீர் ஏறுவது மிறங்குவதுமாயிருக்கும். உலகத்தில் ஏகரூபமாயிருக்கின்ற மரக்கட்டில் போலன்றிக்கே கீழே இயந்திரமமைக்கப் பெற்ற கட்டில் சற்று ஏறுவதும் சற்று இழிவதுமாயிருந்து பரமஸுகாவஹமாயிருக்குமே. அத்தகைய கட்டில் போன்றதாக ஆயிற்றுக் கடல் நீர். அதிலே பிராட்டியும் தானுமாகத் திருக்கண்வளர்ந்தருளுகைக்குப் பாங்காயிருந்ததாம். இவ்விடத்திலே * அழைக்குங் கருங்கடல் வெண்திரைக் கைக்கொண்டு போய் அலர்வாய் மழைக் கண்மடந்தை யரவணை யேற * என்கிற திருவிருத்தப் பாசுரம் ஒரு புடை நினைக்கத் தகும்.

**ப்ரேங்கோல பர்யங்கிகா** - அசையுங் கட்டிலென்றபடி. கீழ் ச்லோகத்தில் டோலா ரோஹணம்; இந்த ச்லோகத்தில் பர்யங்கா ரோஹணம். கீழ் ச்லோகத்தில்

திருக் கண்வளர்ந்து கொண்டு காரியஞ் செய்தமை சொல்லிற்று; இந்த ச்லோகத்தில் கொறுட்டை விட்டமை சொல்லிற்று-என்று சில சமத்கார விந்யாஸ விசேஷங்களை உய்த்துணர்க. (3)

गोपायेदनिशं जगन्ति कुहनापोत्री पवित्रीकृतब्रह्माण्डः प्रलयोर्मिघोषगुरुभिर्घोणारवैर्घुर्घुरैः ।
यद्दंष्ट्राङ्कुरकोटिगाढघटनानिष्कम्पनित्यस्थितिः ब्रह्मस्तम्बमसौदसौ भगवती मुस्तेव विश्वम्भरा ॥ ४ ॥

**கோபாயேதநிசம் ஜகந்தி குஹநா போத்ரீ பவித்ரீக்ருத**
**ப்ரஹ்மாண்ட: ப்ரளயோர்மிகோஷ குருபிர் கோணாரவைர்குர்க்குரை:,**
**யத்தம்ஷ்ட்ராங்குரகோடிகாட,கட,நா நிஷ்கம்பநித்யஸ்திதி:**
**ப்ரஹ்மஸ்தம்பமஸௌதஸௌ பகவதீ முஸ்தேவ விச்வம்பரா.** (௪)

| | |
|---|---|
| ப்ரளயஊர்மி கோஷ குருபி: | பிரளயக் கடலின் அலை யோசையிற் காட்டிலும் கனத்திருக்கின்ற |
| குர்குரை: கோணாரவை: | குர் குர் என்கிற மூக்கொலிகளினால் |
| பவித்ரீக்ருத ப்ரஹ்மாண்ட: | ப்ரஹ்மாண்டங்களை ப்பவித்திரமாக்கியருளின |
| குஹநாபோத்ரீ | மாயாவராஹபகவான் |
| ஜகந்தி அநிசம் கோபாயேத் | உலகங்களை எப்போதும் ரக்ஷித்தருளவேணும். |

(இவ்வவதாரத்தின் விசேஷம் உத்தரார்த்தத்தினுலுரைக்கப் படுகிறது.)

| | |
|---|---|
| பகவதீ அஸௌ விச்வம்பரா | பரமபூஜ்யையான இந்த பூமிப் பிராட்டியானவள் |
| முஸ்தா இவ | (சிறிய தொரு) கோரைக் கிழங்கு போல |
| யத் தம்ஷ்ட்ரா அங்குர கோடி காட கடநா நிஷ்கம்ப நித்ய ஸ்திதி: | யாவனொரு வராஹப்பெருமாளுடைய கோரப்பல் முளை நுனியிலே நன்ருக அழுந்தி ஒருபோதும் அசைதலில்லாத இருப்பையுடையவளாகி |
| ப்ரஹ்மஸ்தம்பம் அஸௌத் | ஆப்ரஹ்ம ஸ்தம்ப பர்யந்தமான பிரபஞ்சத்தை யுண்டாக்கினளோ. |

* * * இந்த ச்லோகத்தில் வராஹாவதார சேஷ்டித விசேஷமநுபவிக்கப் படுகிறது. [**குஹநா போத்ரீ அநிசம் ஜகந்தி கோபாயேத்.**] * ஏனமாய் நிலங்கீண்ட வென்னப்பன் எப்போதும் உலகங்களை ரக்ஷித்தருளவேணும். **குஹநா** என்றது மாயா என்றபடி. மாயா சப்தத்தின் பொருள் குஹநா சப்தத்திற்கும் கொள்ளக் கடவது-ஸங்கல்பரூபஜ்ஞாநமேயிறே மாயாசப்தார்த்தம். குஹநா சப்தார்த்தமும் அதுவேயாகுமத்தனை. இந்த்ரஜாலம்போலே காட்டின வடிவன்று. ஸாமான்ய வராஹம் போலன்றிக்கே விலக்ஷண வராஹ மென்கையும், * इच्छागृहीताभिमतोरुदेहः- இச்சா க்ருஹீதாபிமதோரு தேஹ:* என்கிறபடியே ஐச்சமான தென்கையும்.

அந்த மஹா வராஹத்தின் விலக்ஷணமான திருமூக்கொலியின் அநுகாரம் **குர்குரை:** என்பது. * निशम्यते घुर्घुरितम्—நிசம்யதே குர்குரிதம் * என்ற ஸ்ரீ பாகவதோக்தியை அடியொற்றிச் சொல்லுகிறபடி. மஹாவராஹத்தின் குர் குர் என்னும் த்வநிவிசேஷம் செவிப்பட்ட போது ஜநஸ்தபஸ்ஸத்யலோகஸ்தர்கள் 'பவித்ரம் பவித்ரம் பவித்ரம்' என்று மூன்று விசை உச்சரித்ததாகப் புராணம் சொல்லுகையாலே **பவித்ரீக்ருத ப்ரஹ்மாண்ட:** என்றருளிச் செய்தபடி. மஹாவராஹத்தின் திருமூக்கில் நின்று முண்டான அந்த விலக்ஷண குர்குர த்வநியானது ப்ரளயக் கடலில் அலை மோதும்போது உண்டாகக்கடவதான கோஷத்தையும் வென்று விளங்கிற்று.

இவ்வவதாரம் ப்ரளயார்ணவமக்நையான பூமியை உத்தரிக்கைக்காகச் செய்தருளினதாகையாலே அதுதன்னைச் சொல்லுகிறது உத்தரார்த்தம்—[**யத்தம்ஷ்ட்ராங்குரேத்யாதி**] * சிலம்பினிடைச் சிறுபரல்போல் பெரிய மேரு திருக்குளம்பில் கணகணப்பத் திருவாகாரம் குலுங்க, நிலமடந்தைதனையிடந்து புல்கிக் கோட்டிடை வைத்தருளிய வெங்கோமான் * [பெரிய திருமொழி 1-4-8] என்கிறபடியே பெரிய

வடிவத்தை யேற்று ப்ரளயார்ணவத்திலே நிலைத்து பூமியை உருண்டை வடிவாகத் திரட்டியெடுத்துத் தனது கோரப் பற்களின் மேலே தாங்கியது ஆயாஸ லேசமு மின்றிச் செய்ததென்பதையும், அந்த மஹா ப்ருதிவியானது தம்ஷ்ட்ராக்ரமாகிற அந்த ஸ்தல விசேஷத்திலே ஆடாமல் அசையாமல் ஸுப்ரதிஷ்டிதமாயிருந்தபடி யையும் அருளிச்செய்தாராயிற்று.

முஸ்தா என்று கோரைக் கிழங்குக்குப் பெயர். 'முத்தக்காசு' என்று தமி ழில் வழங்கும். ஒரு கோரைக்கிழங்கை கோரப் பல்லின் மேலே கொண்டால் அதற்கு ஆயாஸலேசமுமில்லையாகுமே; மஹா ப்ருதிவியின் உத்தரணமும் அப்ப டியேயாயிற்றென்கை.

[ब्रह्मस्तम्बमसौत — ப்ரஹ்மஸ்தம்பம் அஸௌத்] மிகவும் அற்பமானதொரு த்ருண விசேஷத்திற்கு ஸ்தம்ப மென்று பெயர், ப்ரஹ்மாவாகிற ஸ்தம்பத்தை யென்று சிலர் உரைப்பதுண்டு. ब्रह्म च स्तम्बश्च तयोस्समाहारः—ब्रह्मस्तम्बम्। * सर्वो द्वन्द्वो विभाषयैकवद्भवति * என்கிற வ்யாகரண பரிபாஷையின்படி ஏகவத் பாவம்—என்று கொண்டு ஆப்ரஹ்ம ஸ்தம்ப பர்யந்தமான ஸகல பதார்த்தராசிகளையும் சொல்லு கிறதென்று கொள்ளலாம். இத்தனையும் பூமிப் பிராட்டியின் ப்ரஸவமென்கிறது. ஸௌதி என்கிற லட்ருபத்திற்கு லங்ருபம் **அஸௌத்** என்பது; ப்ரஸவித்த தென்கை. ... ... ... ... ... (4)

**प्रत्यादिष्टपुरातनप्रहरणग्रामः क्षणं पाणिजैः अव्यात्त्रीणि जगन्त्यकुण्ठमहिमा वैकुण्ठकण्ठीरवः।**
**यत्प्रादुर्भवनादवन्ध्यजठरा यादृच्छिकाद्वेधसां या काचित्सहसा महासुरगृहे स्थूणा पितामह्यभूत्॥**

**ப்ரத்யாதிஷ்ட புராதந ப்ரஹரண க்ராமః க்ஷணம் பாணிஜைః**
**அவ்யாத் த்ரீணி ஜகந்த்யகுண்டமஹிமா வைகுண்ட கண்டீரவః,**
**யத்ப்ராதுர் பவநாதவந்த்யஜடரா யாத்ருச்சிகாத் வேதஸாம்**
**யா காசித் ஸஹஸா மஹாஸுர க்ருஹ ஸ்தூணா பிதாமஹ்யபூத்.** (ரு)

| | |
|---|---|
| க்ஷணம் | ஒரு கொடிப்பொழுது |
| பாணிஜைः | திருவுகிர்களாலே |
| ப்ரத்யாதிஷ்ட புரா தந ப்ரஹரண க்ராமః | பழகிப்போன ஸுதர்சந பாஞ்சஜந்யாதி ஆயுத ப்ருந்தங்களை நிராகரித் தருளினவனும் |
| அகுண்ட மஹிமா | எல்லை கடந்த மஹிமை யுடையவனுமான |
| வைகுண்ட கண்டீ ரவः | நரஸிம்ஹமூர்த்தி பகவான் |
| த்ரீணி ஜகந்தி அவ்யாத் | மூவுலகங்களையும் காத்தருளவேணும்; |

(இவ்வவதாரத்தின் விசேஷம் உத்தரார்த்தத்தி னால் பேசப்படுகின்றது.)

| | |
|---|---|
| ஸஹஸா யாத்ருச்சி காத் யத் ப்ராதுர்ப் பவநாத் | முன்பின்னாலோசனையில் லாமல் திடீரென்றுண் டான எந்த நரஸிம்ஹ மூர்த்தியின் ப்ராதுர்ப் பாவத்தாலே |
| அவந்த்ய ஜடரா | கர்ப்பங் கொண்டதான |
| யா காசித் மஹாஸுர க்ருஹ ஸ்தூணா | இரணியனென்னு மசுர னுடைய வீட்டிலுள்ள ஏதோவொரு தூணானது |
| வேதஸாம் பிதாமஹீ அபூத் | சதுர்முக ப்ரஹ்மாக் களுக்குப் பாட்டியா யிற்று. |

* * * இந்த ச்லோகத்தினால் நரஸிம்ஹாவதார வ்ருத்தாந்தத்தை யநுபவிக் கிறார். [**வைகுண்ட கண்டீரவः த்ரீணி ஜகந்தி அவ்யாத்**] வைகுண்ட சப்தம் வைகுண்ட லோகத்தைச் சொல்வதுபோல எம்பெருமான் தனக்கும் திருநாமமா யிருக்கும். வைகுண்ட கண்டீரவ மென்றது பகவத் ஸிம்ஹ மென்றபடி. நரங் கலந்த சிங்கமாயவதரித்த பகவான் அன்று ப்ரஹ்லாதாழ்வானை மட்டும் ரக்ஷித்

தருளினவனல்லன்; ஸ்வகீய திவ்ய சரித்ராநுஸந்தாந முகத்தாலே மூவுலகங்களையும் ரக்ஷித்தருள வல்லவனென்று காட்டுகிறதிங்கு.

**[ப்ரத்யாதிஷ்ட புராதந ப்ரஹரணக்ராம:]** ஹிரண்யகசிபுவென்னுமஸுரன் தான் கொல்லப்படாமைக்கு வரங்கேட்கிறபோது 'ஆயுதத்தினால் கொல்லப்படாதொழிய வேணும்' என்று வரம் கேட்டிருந்தான்; அதற்காக ஆயுதத்தைக் கொள்ளாதொழிய வேண்டிற்று. புராண ப்ரக்ரியையிலே இங்ஙனே தத்துவமிருந்தாலும் ஆயுதங்கொள்ளாமைக்கு தேசிகன் ஒரு ஹேதுவை உத்ப்ரேக்ஷிக்கிறார்—புராதந சப்தத்தாலே அந்த உத்ப்ரேக்ஷை ஸூசிதமாகிறது. திருவாழி முதலான ஷோடசாயுதங்கள் பழகிப்போனபடியாலே அவை கார்யகரங்களாகமாட்டாவென்று திருவுள்ளம்பற்றி அவற்றை உதறித் தள்ளித் திருவுகிர்களையே நூதநாயுதமாகக் கொண்டருளினன் போலுமென்கிறார். **ப்ரத்யாதிஷ்ட** என்றது 'நிரஸ்த' என்றபடி. ப்ரஹரணமென்று ஆயுதத்திற்குப் பெயர். க்ராம சப்தம் ஸமூஹ வாசகம். **பாணிஜ**மென்று நகத்திற்குப் பெயர். திருநகங்களாலே இரணியனுடலைப் பிளந்தானென்று அருளிச்செய்யாதொழிந்தது **மங்கல வழக்கு.** நரஸிம்ஹ சேஷ்டிதம் ஒரு நொடிப் பொழுதில் நிகழ்ந்ததாகையாலே **க்ஷணம்** என்றது. திருவுகிர்களையே திவ்யாயுதமாகக் கொண்டு ஒரு க்ஷண காலத்தில் வியாபரித்த நரஸிம்ஹ மூர்த்தி மூவுலகங்களையும் காத்தருளவேணுமென்றதாயிற்று.

இந்த நரஸிம்ஹ மூர்த்தியின் ப்ராதுர்ப்பாவ ஸ்தலத்தையும் அதன் பெருமையையும் உத்தரார்த்தத்தாலே யருளிச்செய்கிறார். **[யத்ப்ராதுர்ப்பவநாத் இத்யாதி.]** ப்ரஹ்லாதாழ்வான் பகவத் ப்ரபாவத்தைப் பரக்கப் பேசாநிற்க, அது கேட்டு ஸஹிக்கமாட்டாத இரணியன் நீ சொல்லுகிற பகவான் எங்குளன்? என்று உறுமிக் கேட்க; அவன் எங்குமுளன் என்ன; இரணியன் தனது வீட்டிலுள்ள ஒரு தூணைக் காட்டி இத் தூணிலுளனோ வென்ன, 'கேட்கவேணுமா? தூணிலுமுளன் துரும்பிலுமுளன்' என்று ப்ரஹ்லாதாழ்வான் சொல்ல, உடனே அந்தத் தூணை அவன் தட்டினவளவிலே, * அளந்திட்ட தூணை அவன் தட்ட, ஆங்கே வளர்ந்திட்டு வாளுகிர்ச் சிங்கவுருவாய், உளந் தொட்டிரணியனொண் மார்பகலம், பிளந்திட்ட கைகள் * என்கிறபடியே அத்தூணில் நின்றுந் தோன்றி இரணியனைப் புடைத்திட்டானென்கிற வரலாறு ப்ரஸித்தமானது. இந்த ப்ராதுர்ப்பாவமானது யாத்ருச்சிகமென்கிறார்; இங்ஙனேயொரு திவ்யமங்கள விக்ரஹபரிக்ரஹம் பண்ணினதும் யாத்ருச்சிகம்; தூணில் நின்றும் தோன்றியதும் யாத்ருச்சிகம். பண்டு இரணியன் வேண்டிக்கொண்டிருந்த வரம் எப்படிப்பட்டதென்னில்; "மனிதர்களில் ஒருவராலும், விலங்குகளில் ஒன்றினாலும் படக்கடவேனல்லேன்; பகலிலும் இரவிலும் இறக்கக்கடவேனல்லேன்; வீட்டுக்கு வெளியிலும் உள்ளிலும் நிலத்திலும் விண்ணிலும் வீயக் கடவேனல்லேன்; ஆயுதத்தாலும் மாளக்கடவேனல்லேன்" என்றிப்படி பல நிபந்தனைகள் கூறி வரம் வேண்டிப் பெற்றிருந்தனன். அந்த வரலாபத்திற்கு ஹாநியில்லாமே செய்தருளின அவதாரமாயிற்றிது. தனிப்பட மனிதனும் விலங்குமன்றிக்கே நரங்கலந்த சிங்கமென்கிற விலக்ஷணமானதொரு வடிவு கொள்ளப்பட்டது. பகலுமிரவுமாகாதபடி அந்தியம்போதிலே தோன்றிற்று. வீட்டுக்கு வெளிப்புறமும் உட்புறமுமாகாதபடி வாசற்படியிலிருந்துகொண்டு முடிக்கலாயிற்று. தரையிலும் வானத்திலுமாகாமே மடியிடை வைத்து மார்வகம் கீண்டனன். ஆயுதத்தினாலாகாமே நகத்தினாற் பிளந்தனன். இவையெல்லாம் இங்ஙனேயாகவேணுமென்று முந்துற ஆலோசித்து முடித்துச் செய்தபடியன்றே. அத்தனையும் யாத்ருச்சிகமாக நிகழ்ந்தபடி.

**[அவந்த்ய ஜடரா.]** ப்ரஸவம் செய்யாத வயிற்றுக்கு வந்த்ய ஜடரமென்று பெயர்; உலகத்தில ஹிரண்யாசுரனுடைய க்ருஹத்திலிருந்த ஒரு தூண்மட்டுமே

அவந்த்ய ஜடரமாயிற்று. வரதராஜ பஞ்சாசத்தில் "भक्तस्य दानवशिशोः परिपालनाय भद्रां नृसिंहकुहनामधिजग्मुषस्ते । स्तम्भैकवर्जमधुनाऽपि करीश नूनं त्रैलोक्यमेतदखिलं नरसिंह गर्भम्— பக்தஸ்ய தாநவசிசோ: பரிபாலநாய பத்ராம் ந்ருஸிம்ஹ குஹநாம் அதிஜக்முஷஸ் தே: ஸ்தம்பைகவர்ஜமதுநாபி கரீச! நூநம் த்ரைலோக்ய மேத தகிலம் நரஸிம்ஹ கர்ப்பம்" என்றருளிச் செய்தபடி ப்ரஹ்லாதாழ்வானுடைய ஸம்ரக்ஷணார்த்தமாக எம்பெருமான் நரசிங்கவடிவுகொண்டு அந்தர்யாமியாயிருக்க நினைத்தபோது மூவுலகிலும் ஸகல பதார்த்தங்களிலுமே நரஸிம்ஹமூர்த்தியா யடங்கியிருந்தனன்; இங்குளனோ வென்று இரணியன் தட்டினவிடம் ஒன்றே யாதலால் அந்த ஓரிடம் மட்டுமே அவந்த்ய ஜடரமாயிற்று; நரஸிம்ஹகர்ப்பமான மற்ற ஸகல ஸ்தலங்களும் வந்த்ய ஜடரமாயே யிருக்கிறபடி.

[க்ருஹஸ்தூணு] க்ருஹ சப்தமும் ஸ்தூண சப்தமும் ஸமாஸமடையும்போது க்ருஹஸ்தூணமென்றாகக் கடவதென்று வியாகரணவிதி யிருக்கையாலே "**மஹாஸுரக்ருஹே ஸ்தூணு**" என்று பாடமாகில் நன்றாம் என்பர் பெரியோர். [**வேதஸாம் பிதாமஹீ அபூத்**] பகவானுக்கு மாதாவானவிடம் பகவத்புத்ரனை நான்முகனுக்குப் பிதாமஹியாகக் கடவதிறே. கல்பந்தோறும் மாறி மாறிவருகின்ற ப்ரஹ்மாக்கள் பலராகையாலே அந்தப் பன்மையையிட்டு **வேதஸாம்** என்று பஹுவசநப்ரயோகம் பண்ணிற்று. ... ... ... ... (5)

व्रीडाविद्धवदान्यदानवयशोनासीरधाटीभटस्त्रैयक्षं मकुटं पुनन्नवतु नस्त्रैविक्रमो विक्रमः ।
यत्प्रस्तावसमुच्छ्रितध्वजपटीवृत्तान्तसिद्धान्तिभिः स्रोतोभिः सुरसिन्धुरष्टसु दिशासौधेषु दोधूयते ॥

**வ்ரீடாவித்த வதாந்ய தாநவயசோ நாஸீர தாடீபட:**
**த்ரையக்ஷம் மகுடம் புநந்நவது ந: த்ரைவிக்ரமோ விக்ரம:**
**யத்ப்ரஸ்தாவஸமுச்ச்ரித த்வஜபடீ வ்ருத்தாந்த ஸித்தாந்திபி:**
**ஸ்ரோதோபிஸ் ஸுரஸிந்துரஷ்டஸு திசாஸௌதேஷு தோதூயதே.** (சு)

| | |
|---|---|
| வ்ரீடா வித்த வதாந்ய தாநவ யசோ நாஸீர தாடீ பட: | வெட்கத்தினால் வருத்தமடைந்த பெருவள்ளலான மஹாபலியின் யசஸ்ஸுக்கு முன்னேயோடிச் செல்லும் சேவகன் போன்றதும் |
| த்ரையக்ஷம் மகுடம் புநந் | முக்கண்ண மூர்த்தியின் முடியைப் பரிசுத்தமாக்கா நின்றதுமான |
| த்ரைவிக்ரம: விக்ரம: | த்ரிவிக்ரம மூர்த்தியினுடையதான அடிவைப்பானது |
| ந: அவது | நம்மை ரக்ஷிக்கக்கடவது; |

(த்ரிவிக்ரமவிக்ரமத்தின் பெருமை உத்தரார்த்தத்தினால் கூறப்படுகிறது.)

| | |
|---|---|
| யத்ப்ரஸ்தாவ ஸமுச்ச்ரித த்வஜபடீ வ்ருத்தாந்த ஸித்தாந்திபி: | யாதொரு த்ரிவிக்ரம விக்ரமத்தினுடைய ப்ராரம்பத்தில் உயரவெடுக்கப்பட்ட த்வஜபடமே யென்று நிர்ணயிக்கலாம்படியுள்ள |
| ஸ்ரோதோபி: | ப்ரவாஹங்களாலே |
| ஸுரஸிந்து: | தேவகங்கையானது |
| அஷ்டஸு திசா ஸௌதேஷு | எட்டுத் திசைகளாகிற மாடங்களின் மீது |
| தோதூயதே | மிகவும் அலையெறிகின்றதோ. |

* * * இந்த ச்லோகத்தில் வாமநாபதானத்தை ஆக்ஷிப்தமாகவும், த்ரிவிக்ரமாபதாநத்தை ஆபிதாநிகமாகவும் பேசி மகிழ்கிறார். தேவேந்திரனுடைய ப்ரார்த்தநையை நிறைவேற்றக் கருதிய பகவான் * மன்னன் தன் தேவிமார் கண்டு மகிழ்வெய்த * எண்கிறபடியே மஹாபலியின் தேவிமாருட்படக் கண்டு மகிழும்படியாகக் கொண்டகோலக் குறளுருவாய்ச் சென்று நின்ற

வளவிலே அந்த வடிவின் வைலக்ஷண்யத்தையும், பேசின பேச்சின் வாசியையுங் கண்டு நெஞ்சுருகி ஸர்வஸ்வதாநம்பண்ண ஸித்தனாயிருந்தான் மஹாபலி. ஆனாலும் அபேக்ஷிதம் இன்னதென்று தெரிந்துகொண்டு கொடுப்போமென்று கருதி, 'மாணீ! என்னவேணும்?' என்று கேட்க, வாமனன் "என்னுடைய பாதத்தால் யானளப்ப மூவடி மண் மன்னா! தருக" என்றான்; அது கேட்டவாறே மஹாபலிக்கு மிகுந்த வெட்கமுண்டாயிற்று. 'கல்ப வ்ருக்ஷத்தினிடத்தில் கௌபீநதாநம் கேட்குமாபோலே ஸர்வஸ்வதாந ஸமுத்ஸுகனான என்னிடத்திலே இவன் தன்னுடைய குட்டைக் காலாலே மூவடிமண் வேண்டுகின்றானே!' என்று லஜ்ஜை கொண்டானாயிற்று மாவலி; அது சொல்லுகிறது [வ்ரீடாவித்தவதாந்ய தாநவ] என்று.

"இவன் தேவகார்யம் செய்யவந்த தேவாதி தேவனாகையாலே இவனுக்குக் கொடாதே" என்று சுக்கிரன் விலக்கச் செய்தேயும் மாவலி 'இவனில்மிக்க ஸத்பாத்ரமுண்டோ?' என்று நெஞ்சு நெகிழ்ந்து தாரைவார்த்து தத்தம் பண்ணினவாறே, தானம் பெற்ற மூவடிமண்ணைத் தன் காலால் அளக்கப்புக, *ஒண்மிதியிற் புனலுருவி யொருகால் நிற்ப ஒருகாலும் காமரு சீரவுணனுள்ளத் தெண்மதியுங்கடந்தண்டமீது போகியிருவிசும்பினூடுபோயெழுந்து, மேலைத் தண்மதியுங் கதிரவனுந் தவிரவோடித் தாரகையின் புறந் தடவியப்பால்மிக்கு மண்முழுது மகப்படுத்து நின்ற வெந்தை* என்கிறபடியே விண்ணுலக முழுவதும் அளக்கப்பட்டதென்னும் வரலாற்றை வாய்விட்டருளிச்செய்யாமல் வதாந்ய தாநவயசோநாஸீரதாடீபட: த்ரைவிக்ரமோ விக்ரம:" என்று சமத்காரசாலியான உக்திவிசேஷத்தாலே யருளிச்செய்கிறார். உலகத்தில் பெருவள்ளல்கள் பலருளரேனும் பகவானுக்கு தானம் செய்தவர் மஹாபலியிற்காட்டில் வேறொருவருமில்லையே; அப்படிப்பட்ட பாக்யம் பெற்றவன் மாவலியொருவனே யாதலால் இவனுடைய கீர்த்தி ஒரு நொடிப்பொழுதில் உலகமெங்கும் பரவத் தொடங்கிற்றாம்; ஒரு மஹாப்ரபு யாத்திரை செய்யப்புக்கால் ஒருபடன் முன்னோடிச் செல்பவனுண்டே; அவனை யொத்திருக்கின்றதாய்த்து த்ரிவிக்ரமனுடைய விக்ரமம். விக்ரமமாவது - உலகளப்பு; பராக்ரமமுமாம். எம்பெருமானுடைய திருவடி செல்லுமிடமெல்லாம் மஹாபலியின் புகழ் பரவா நின்றதென்றதாயிற்று.

இனி உத்தரார்த்தத்தால் ஸ்ரீபாததீர்த்த மவதரித்த பெருமை சொல்லுகிறது [யத்ப்ரஸ்தாவேத்யாதி.] *குறைகொண்டு நான்முகன் குண்டிகைநீர் பெய்து, மறைகொண்ட மந்திரத்தால் வாழ்த்திக் கறைகொண்ட கண்டத்தான் சென்னி மேலேறக் கழுவினான், அண்டத்தான் சேவடியையாங்கு* என்றும், *அங்கையாலடிமூன்று நீரேற்று அயனலர்கொடு தொழுதேத்தக், கங்கை போதரக் கால்நிமிர்த்தருளிய கண்ணன்* என்றும் சொல்லுகிறபடியே, ஸத்யலோகத்தளவுஞ்சென்ற திருவடியை சதுர்முகப்ரஹ்மா தன்னுடைய கமண்டல தீர்த்தத்தினால் விளக்கினபோது அந்த தீர்த்தம் மஹாகங்கையாய்ப் பெருகி எண்டிசைகளையும் பவித்திரமாக்கினபடி சொல்லிற்றாயிற்று. பெரிய திருமொழியில் (1-4-3.) *கொழுஞ்சுடர் சுழன்ற விலங்கலினுரிஞ்சி மேல்நின்ற விசும்பில் வெண்துகில் கொடியென விரிந்து வலந்தரு மணி நீர்க்கங்கை* என்றபாசுரத்தில் "வெண்துகில் கொடியென" என்று திருமங்கையாழ்வா ரருளிச்செய்ததைத் தழுவி இங்கு "த்வஜபட" என்றருளிச்செய்தது. "த்வஜபட வ்ருத்தாந்த ஸித்தாந்திபி:" என்றது 'த்வஜபடஸத்ருசை:' என்றபடி ஸித்தாந்த பதப்ரயோகம் பண்ணின ஸ்வாரஸ்யாதிசயத்தால் இந்த த்ரைவிக்ரமாபதானமே உலகளந்த மூர்த்தியின் பரத்வஸித்தாந்தம் பண்ண வல்லதென்னுமிடம் ஸூசிதமாகிறது. பட்டர் ஸ்ரீரங்க ராஜஸ்தவத்திலே "விபோர் நாபிபத்ம:...........ஸித்தாந்தயதி ந:" என்றருளிச் செய்ததும் இங்கு அநுஸந்தேயம்.

.... .... ... ....

क्रोधाग्निं जमदग्निपीडनभवं सन्तर्पयिष्यन् क्रमात् अक्षत्रामिह सन्ततक्ष य इमां त्रिस्सप्तकृत्वः क्षितिम् ।
दत्त्वा कर्मणि दक्षिणां क्वचन तामास्कन्द्य सिन्धुं वसन् अब्रह्मण्यमपाकरोतु भगवानाब्रह्मकीटं मुनिः ॥

க்ரோதாக்நிம் ஜமதக்நி பீடநபவம் ஸந்தர்ப்பயிஷ்யந் க்ரமாத்
அக்ஷத்ராமபி ஸந்ததக்ஷ ய இமாம் த்ரிஸ்ஸப்தக்ருத்வ: க்ஷிதிம்,
தத்வா கர்மணி தக்ஷிணாம் க்வசந தாம் ஆஸ்கந்த்ய ஸிந்தும்வஸந்
அப்ரஹ்மண்ய மபாகரோது பகவாந் ஆப்ரஹ்மகீடம் முநி: (எ)

| | | | |
|---|---|---|---|
| ய: | யாவனொரு பரசுராமர் | க்வசந கர்மணி | ஒரு வேள்விதன்னில் |
| ஜமதக்நி பீடந பவம் | தமது தகப்பனாராகிய ஜமதக்நியை நலித்ததனாலுண்டான | தாம் தக்ஷிணாம் தத்வா | அந்தப் பூமியை தக்ஷிணையாகக் கொடுத்துவிட்டு |
| க்ரோத அக்நிம் | கோபத்தீயை | ஸிந்தும் ஆஸ்கந்த்ய | கடலை வசப்படுத்திக் கொண்டு |
| ஸம்தர்ப்பயிஷ்யந் | சமநம் செய்து கொள்ளக் கோலினவராய் | வஸந் | அவ்விடத்தே வாழ்பவராய் |
| இமாம் க்ஷிதிம் | இப்பூமியை | பகவாந் ஸ: முநி: | வீர்யாதிகுண ஸம்பந்நரான அப்பரசுராம முனிவர் |
| அக்ஷத்ராம் அபி | க்ஷத்ரியப் பூண்டில்லாதபடி | ஆப்ரஹ்மகீடம் | பிரமன் முதல் புழுவளவாகவுள்ள ஸகல ப்ராணிஸமூஹங்களுக்கும் |
| க்ரமாத் | அடைவே | | |
| த்ரிஸ்ஸப்த க்ருத்வ: | மூவேழு தலைமுறை | அப்ரஹ்மண்யம் அபாகரோது | அமங்களத்தைப் போக்க வேணும். |
| ஸம்ததக்ஷ | வேரற வெட்டிப் பொகட்டாரோ, | | |

* * * இந்த ச்லோகம் பரசுராமாவதாரப்ரசம்ஸையாகத் திருவவதரித்தது. * வென்றிமா மழுவேந்தி முன்மண்மிசை மன்னரை மூவெழுகால் கொன்ற தேவா* என்றும், * கோக்குல மன்னரை மூவெழுகால் ஒருகூர்மழுவால் போக்கியதேவன்* என்றும் பேசப்படுகிற பரசுராமனுடைய கீர்த்தி பூர்வார்த்தத்தினால் கூறப்படுகிறது. [ஜமதக்நி பீடநபவம் 'க்ரோதாக்நிம்' ஸந்தர்ப்பயிஷ்யந் இத்யாதி.] க்ருதவீர்யனுடைய குமாரனான கார்த்தவீர்யார்ஜுநன் அத்ரி குமாரனாய் நாராயணாம்சபூதனான தத்தாத்ரேய முனிவனை யாராதித்து அவனுடைய அநுக்ரஹத்தினால் ஆயிரந்தோளுடைமை முதலான பல பெருமைகளைப் பெற்றிருந்தான். இவன் ஒருகால் சேனையுடனே வனத்திற் சென்று வேட்டையாடிவந்து பரசுராமனது தந்தையான ஜமதக்நி முனிவனது ஆச்ரமத்தையடைந்து முனிவனநுமதியால் அங்கு விருந்துண்டு மகிழ்ந்து மீளுகையில், ஹோமதேநு முனிவனுக்குப் பலவளங்களையும் எளிதிற் கறந்தளிப்பதைக் கண்டதனால் அதனிடம் ஆசைகொண்டு அப்பசுவை அம்முனிவனநுமதியில்லாமல் பலாத்காரமாகக் கவர்ந்து செல்ல, அதனையறிந்த பரசுராமன் பெருங்கோபங்கொண்டு ஆயுதங்களுடனே சென்று கார்த்தவீர்யார்ஜுநனுடன் போர் செய்து அவனைப் பதினொரு அக்ஷௌஹிணி சேனையுடனே நிலைகுலைத்து அவனது ஆயிரந்தோள்களையும் தலையையும் தனது கோடாலிப் படையினால் வெட்டி வீழ்த்தி வெற்றி கொண்டான். இங்ஙனே யானதும் கார்த்தவீர்யனது குமாரர்கள் பழிக்குப் பழிவாங்க வேண்டுமென்று நிச்சயித்துப் பரசுராமனில்லாத ஸமயம் பார்த்துப் பர்ண சாலையினுட் புகுந்து அவனது தந்தையான ஜமதக்நியைத் தலை துணித்துப் போக, பின்பு வந்த பரசுராமன் அதனையறிந்து பெருஞ்சினங்கொண்டு சென்று அவ்வர்ஜுந குமாரர்களையும், உலகத்திலுள்ள செருக்குக் கொண்ட பல அரசர்களையும் அழித்தொழித்து துஷ்ட க்ஷத்ரியப் பூண்டேயில்லாதபடி இருபத்தொரு தலை முறையளவும் தீராத சினத்தனனாய் வெற்றி கொண்டனன். நம்மாழ்வாரும் திருவாய்மொழியில் * இருபத்தோர்கால் அரசுகளை கட்டவென்றி நீண்மழுவா! * என்றருளிச் செய்தார். இவ்விதிஹாஸம் இங்குப் பூர்வார்த்தத்தாலருளிச் செய்யப்பட்டது.

இனி உத்தரார்த்தத்தில் மூன்ரும் பாதத்தினுல் பரசுராமனுடைய மற்ருெரு பெருமை பேசப்படுகிறது. [தத்வா கர்மணி தக்ஷிணும் இத்யாதி.] பரசுராமன் ஸர்வ க்ஷத்ரியஸம் ஹாரம் செய்து பூலோகம் முழுவதையும் தன்னுடைய தாக்கின பின்பு அப்பூமி முழுவதையும் காச்யப முனிவனுக்குத் தானஞ்செய்துவிட, பின்னெரு காலத்தில் அம்முனிவன் பரசுராமனைக் கர்வபங்கம் செய்யும் பொருட்டு 'எனக்குத் தானஞ் செய்திட்ட விடத்திலே நீ வஸித்திருத்தல் தகுதியோ?' என்ன, உடனே பரசுராமன் இடம் விட்டுஅகன்று மேல்கடலிற் சென்று வருணனை வேண்டி அவனனுமதியின் மேல் சைய மலையினின்று தனது கோடாலிப் படையை வலிமையோடு வீசியெறிந்து அது சென்றுவிழுந்த அவ்வளவிடத்தைக் கடல் ஒதுங்கி அப்பால் சென்று தனக்கென்று அளிக்கப்பெற்று, அங்குத் தங்கியிருந்தா னென்பது வரலாறு. ஆக இப்படிப்பட்ட பெருமைகள் படைத்த பரசுராமன் [ஆப்ரஹ்மகீடம் அப்ரஹ்மண்யம் அபாகரோது] இம் முனிவன் கோபமே வடிவெடுத்தவனுயினும் கோபத்திற்கு விஷய மறிந்தவனுகையாலே ப்ரஹ்மாதி பிபீலிகா பர்யந்தமாக ஸகல ஸகல ப்ராணிவர்க்கங்களுக்கும் தீமைகளைப் போக்கி நன்மையையளிக்கக் குறையில்லையிறே. அங்ஙனேயளிக்கவேணுமென்று கோருகிறபடி. ... ... (7)

पारावारपयोविशोषणकलापारीणकालानलज्वालाजालविहारहारिविशिखव्यापारघोरक्रमः ।
सर्वावस्थसकृत्प्रपन्नजनतासंरक्षणैकव्रती धर्मो विग्रहवानधर्मविरतिं धन्वी स तन्वीत नः ॥ ८ ॥

பாராவார பயோ விசோஷண கலா பாரீண காலாநல
ஜ்வாலாஜால விஹார ஹாரி விசிக வ்யாபார கோரக்ரமः
ஸர்வாவஸ்த ஸக்ருத் ப்ரபந்நஜநதா ஸம்ரக்ஷணைக வ்ரதீ
தர்மோ விக்ரஹவா நதர்மவிரதிம் தந்வீ ஸ தந்வீத நः. (அ)

| | | | |
|---|---|---|---|
| பாராவார பயோ விசோஷண கலா பாரீண காலாநல ஜ்வாலா ஜால விஹார ஹாரி விசிக வ்யாபார கோர க்ரமः | கடல் நீரைவற்றச் செய்கையாகிற கலையில் வல்லமை பெற்றதாய், ப்ரளய காலாக்நியின் ஜ்வாலாஸமூஹத்தின் விளையாட்டைக்கொண்டதான அம்புகளின் செயல்களினுடைய உக்ரத்தன்மையையுடையவராய் | விக்ரஹவாந்தர்மः | தர்மமே வடிவெடுத்தது போன்றவரான |
| | | ஸः தந்வீ | சார்ங்கபாணியான அந்த சக்ரவர்த்தி திருமகனுர் |
| | | நः | அடியோங்களான நமக்கு |
| ஸர்வாவஸ்த ஸக்ருத் ப்ரபந்ந ஜநதா ஸம்ரக்ஷண ஏக வ்ரதீ | எந்த நிலைமையிலிருப்பவர்களானுலும் ஒருகால் ப்ரபந்நர்களான ஜனங்களை ஸம்ரக்ஷிப்பதையே முக்கியமான விரதமாகக் கொண்டவராய் | அதர்மவிரதிம் தந்வீத | தீச் செயல்களினின்று விச்ராந்தியை விளைவித்தருளவேணும். |

*** இந்த ச்லோகத்தில் சக்ரவர்த்தி திருமகனுருடைய திருவவதாரத்தில் ஏகதேசாநுபவம் செய்கிறபடி. * ஸமுத்ரம் ராகவோ ராஜ சரணம் கந்துமர்ஹதி * என்று விபீஷணுழ்வான் சொன்ன சொல்லில் ஆதராதிசயத்தாலே ஸமுத்ர ராஜனை நோக்கி சரணுகதி செய்து * निशास्तिस्रोऽतिचक्रमुः—நிசாஸ் திஸ்ரோதிசக்ரமுः * என்கிறபடியே மூன்று நாள் கடந்தவளவிலும் ஸமுத்ர ராஜன் வந்து முகங்காட்டிற்றிலனுக * க்ரோதமாஹாரயத் தீவ்ரம் * என்கிறபடியே மிக்க சீற்றத்தை ஆவாஹநஞ் செய்துகொண்டு * அஸமர்த்தம் விஜாநாதி மாமயம் மகராலய:—சாபமாநய ஸௌமித்ரே! சராம்ச்ச ஆசீவிஷோபமாந் * ஸாகரம் சோஷயிஷ்யாமி பத்ப்யாம் யாந்து ப்லவங்கமாः * என்று கடலை வற்றச்செய்வதாக உத்யோகித்த அவஸரத்தை நோக்கி

இதில் பூர்வார்த்தமருளிச் செய்யப்படுகிறது. வால்மீகி மஹர்ஷியானவர் நாரதமஹர்ஷியை நோக்கி *को न्वस्मिन् सांप्रतं लोके गुणवान् कश्च वीर्यवान्—கோ ந்வஸ்மிந் ஸாம்ப்ரதம் லோகே குணவாந் கச்ச வீர்யவாந் * என்று தொடங்கி ப்ரச்நம்பண்ணி வருகையில் * कस्य बिभ्यति देवाश्च जातरोषस्य संयुगे—கஸ்ய பிப்யதி தேவாச்ச ஜாதரோஷஸ்ய ஸம்யுகே * என்பது முடிவான ப்ரச்நமாக நின்றது. அந்த வினவுக்கு லக்ஷ்யமாகக் கூடிய அபதாநமாயிற்று இது. மஹா வீரனென்றும் மஹா சூரனென்றும் ப்ரக்யாதரான பெருமாளுடைய திவ்ய சரித்திரங்களிலே இந்த சரித்ர விசேஷத்தை யெடுத்துரைக்க வேணுமென்கிற அபிநிவேச முண்டாயிற்று ஸ்வாமிக்கு. * வேலை வேவ வில்வளைத்த வெல்சினத்த வீர! * என்கிற திருமழிசைப்பிரான் பாசுரத்தை யநுஸந்தித்துக்கொண்டே பூர்வார்த்த மருளிச் செய்கிறபடி.

"பாராவாரபயோ விசோஷணகலா பாரீண" என்பதும் "காலா நல ஜ்வாலா ஜாலவிஹாரஹாரி" என்பதும் விசிக விசேஷணங்களாகையாலே விசேஷணோபயபத கர்மதாரயஸமாஸம் கொள்ளக் கடவது. வால்மீகிமஹர்ஷியால் ஆசீர்விஷோபமங்களாகச் சொல்லப்பட்ட ராமபாணங்கள் எப்படிப்பட்டவை யென்னில் பாராவாரபயோ விசோஷண கலாபாரீணங்களாயும், காலாநல ஜ்வாலாஜால விஹாரஹாரிகளாயுமிருப்பவை. பாராவாரமென்று கடலுக்குப் பெயர்; அதில் நீரை நிச்சேஷமாக வற்றச்செய்கையாகிற கலையிலே பாரங்கதங்கள் ராமபாணங்கள். பெருமாள் * ஸாகரம் சோஷயிஷ்யாமி * என்று அச்சமுறுத்தினரேயல்லது சோஷணம் செய்திலரே, ஆகவே இந்த விசேஷணம் ராமபாணத்திலே அந்வயிக்க ஔசித்யமில்லையென்று கொண்டு சிலர் காலாநலத்திற்கு விசேஷணமாக அந்வயித்து, ப்ரலயகாலாக்நியானது பாராவாரபயோ விசோஷண கலாபாரீணம் - என்பதாகச் சொல்லுவர்கள்; அது வக்த்ருவிவக்ஷிதமுமன்று, ஸமஞ்ஜஸமுமன்று. ராமபாணம் பாராவாரபயோ விசோஷணம் செய்து தலைக் கட்டாவிட்டாலும் ஸ்வரூப யோக்யதையில் குறையில்லாமை கொண்டு அருளிச்செய்தபடி. [காலாநல ஜ்வாலாஜால விஹாரஹாரி....] ப்ரளயகாலாக்நியின் ஜ்வாலாஜாலங்கள் செய்யும் விஹாரத்தை ராமபாணங்களும் செய்யவல்லவை யென்றபடி. ஆக மஹாவீரத்வோபபாதநம் செய்தற்றது.

இனி மூன்றாவது பாதத்தினால் "சரணாகதவத்ஸல:" என்று பிராட்டியருளியிட்ட மஹாகுணம் நிரூபிக்கப்படுகிறது. இந்த மஹாகுணத்தைப் பெருமாள் ஸமுத்ரசரணாகதிக்கு முன்பும் காட்டினார், பின்பும் காட்டினார். முன்பு காட்டினது ஸ்ரீ விபீஷணாழ்வான் விஷயத்திலே; பின்பு காட்டினது ஸமுத்ர ராஜன் விஷயத்திலேயே. சப்தஸந்நி வேசத்தை நோக்குமிடத்து * ஸக்ருதேவ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே, அபயம் ஸர்வபூதேப்யோ ததாமி ஏதத் வ்ரதம் மம * என்கிற அபயப்ரதான ச்லோகத்தைத் திருவுள்ளம்பற்றியே இது அருளிச்செய்வதாக விளங்காநின்றது. 'ஸக்ருத்ப்ரபந்ந......வ்ரதீ' என்கிற சொற்களை நோக்குக. * ஸர்வாவஸ்த * என்றது "ஸர்வாவஸ்தாம் கதோபி வா" என்கிற ப்ரமாண வசனத்தில் நோக்காக; ஒரு வ்யக்தி பக்கலிலே ஏககாலத்திலே ஸர்வாவஸ்தைகளும் கூடமாட்டாவாயினும், ஜநதா என்று ஜநஸமூஹத்தை இங்குச் சொல்லியிருக்கையாலே அநேக வ்யக்திகளிடத்திலே ஸர்வாவஸ்தைகளும் கூடியிருக்கக் குறையில்லையென்று கொள்க. யாரேனுமொருவர் எந்த அவஸ்தையிலே கிடந்தாலும் * ஸக்ருதேவ ப்ரபந்நாய * என்கிற அபயப்ரதாந ச்லோகத்தில் விச்வாஸாதிசயத்தாலே ஸக்ருத்ப்ரபத்தி பண்ணின வளவிலே அந்த வ்யக்தி விசேஷத்தை ரக்ஷ்யகோடியிலே அடைப்பாக்கிக் கொண்டு தத்ரக்ஷணத்திலே தீக்ஷிதனாயிருக்கை சக்ரவர்த்தி திருமகனுக்கு அஸாதாரணாகாரமாயிற்று.

[தர்மோ விக்ரஹவாந்] * ராமோ விக்ரஹவாந் தர்ம:* என்று மாரீசன் நிலை கண்டு கூறின விஷயமாயிற்றிது. முமுக்ஷுப்படியில் " தர்ம ஸம்ஸ்தாபனம் பண்ணப் பிறந்தவன்தானே ஸர்வதர்மங்களையும் விட்டு என்னைப்பற்று என்கையாலே ஸாக்ஷாத் தர்மம்தானே யென்கிறது " என்றருளிச் செய்ததுமிங்கே அநுஸந்தேயம். ஸித்த தர்மமென்றும் ஸாத்ய தர்மமென்றும் தர்மம் இருவகைப்படும். ஸாத்ய தர்மத்தை ஆபாஸ தர்மமென்றும் சொல்லுவதுண்டு. * தர்மஸம்ஸ்தாபநார்த்தாய * என்றவிடத்திலே ஸ்தாபயிதயா அபிமதமான தர்மம்-ஸநாதந தர்மமாய் ஸாக்ஷாத் தர்மமான தானேயாகையாலே * தர்ம ஸம்ஸ்தாபநார்த்தாய * என்றதும் * ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய * என்றதும் பரஸ்பர விருத்தமல்ல. கண்ணபிரானைச் சொல்லுமிடத்து * க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம் * என்று சொல்லிற்று. ராமபிரானைச் சொல்லுமிடத்து * ராமோ விக்ரஹவாந் தர்ம: * என்று சொல்லிற்று. ஆக தர்மமே வடிவெடுத்தவர் பெருமாளென்கை. [தந்வி] * சார்ங்கமென்னும் வில்லாண்ட பெருமாள். [ஸ: ந: அதர்மவிரதிம் தந்வித.] தர்மமூர்த்தியைப் பணிவதற்குப் பலன் அதர்ம வைமுக்யமேயிறே. அதர்ம மார்க்கத்தில் நின்றும் விச்ராந்திபெற்று தர்ம மூர்த்தி பக்கலிலேயே ஈடுபட்டிருப்போமென்றதாயிற்று. .... .... (8)

पक्कत्कौरवपट्टणप्रभृतयः प्रास्तप्रलम्बादयः तालाङ्कस्य तथाविधा विहृतयस्तन्वन्तु भद्राणि नः ।
क्षीरं शर्करयेव याभिरपृथग्भूताः प्रभूतैर्गुणैः आकौमारकमस्वदन्त जगते कृष्णस्य ताः केलयः ॥ ९ ॥

**பக்கத்கௌரவ பட்டண ப்ரப்ருதய: ப்ராஸ்த ப்ரலம்பாதய:**
**தாலாங்கஸ்ய ததாவிதா விஹ்ருதய: தந்வந்து பத்ராணி ந:**
**க்ஷீரம் சர்க்கரயேவ யாபிரப்ருதக் பூதா: ப்ரபூதைர் குணை:**
**ஆகௌமாரக மஸ்வதந்த ஜகதே க்ருஷ்ணஸ்ய தா: கேளய:** (௯)

| | | | |
|---|---|---|---|
| பக்கத் கௌரவபட்டண ப்ரப்ருதய: | கௌரவபட்டணமான ஹஸ்திநாபுரி முதலான வற்றைக் கவிழச் செய்தவையும் | சர்க்கரயா க்ஷீரம் இவ | சர்க்கரையோடு கூடின பால்போலே |
| ப்ராஸ்த ப்ரலம்ப ஆதய: | ப்ரலம்பாஸுரன் முதலானவர்களை முடித்தவையும் | க்ருஷ்ணஸ்ய ஆகௌமாரகம் தா: கேலய: | கண்ணபிரானுடைய பாலப் பிராயமே பிடித்துண்டான அந்த விளையாடல்கள் |
| ததாவிதா: | மற்றும் பலவகைப் பட்டவையுமான | யாபி: அப்ருதக்பூதா: | எந்த பலராமசேஷ்டைகளோடே கூடினவைகளாகி |
| தாலாங்கஸ்ய விஹ்ருதய: | பலராமனுடைய விளையாடல்கள் | ப்ரபூதை: குணை: | மிகச்சிறந்த ஸௌசீல்யாதி குணங்களாலே |
| ந: பத்ராணி தந்வந்து | நமக்கு மங்கலங்களை விளைவிக்கவேணும் ; | ஜகதே அஸ்வதந்த | உலகுக்கு ருசித்தனவோ. |

* * * நம்பி மூத்தபிரானென்னும் பலராமனுடைய திவ்ய சரித்திரத்தை யநுபவிப்பதாமிந்த ச்லோகம். நம்பி மூத்தபிரானும் கண்ணபிரானும் ஒருவரையொருவர் விட்டுப் பிரியாதே கூடியிருந்து குளிர்ந்தவர்களிறே. * முன்னலோர் வெள்ளிப் பெருமலைக் குட்டன் மொடு மொடு விரைந்தோடப், பின்னைத் தொடர்ந்ததோர் கருமலைக் குட்டன் பெயர்ந்தடியிடுவதுபோல், பன்னி யுலகம் பரவியோவாப் புகழ்ப்பல தேவனென்னும், தன்னம்பி யோடப் பின்கூடச் செல்வான் * என்று பெரியாழ்வாரும், * பட்டிமேய்ந்தோர் காரேறு பலதேவற்கோர் கீழ்க்கன்றாய் * என்று பெரியாழ்வார் திருமகளாரு மருளிச் செய்தவை காண்க ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் காளியமர்த்தநம் கூறப்புகுந்த ஸ்ரீ பராசரபகவான் * एकदा तु विना रामं कृष्णो बृन्दावनं ययौ—ஏகதா து விநா ராமம் க்ருஷ்ணோ ப்ருந்தாவநம் யயௌ * என்று தொடங்கினர். இதை யநுஸரித்தே பட்டர் ஸ்ரீரங்க ராஜஸ்தவத்திலே

* यद्विश्लेषलवोऽपि कालियभुवे कोलाहलाया भवत् — யத்விச்லேஷலவோபி காளியபுவே கோலாஹலாயாபவத் * என்றருளிச்செய்தார். "தமையன் ஒரு க்ஷணம் பேர நிற்கில் தம்பி பாம்பின் வாயிலே விழும்படி யாயிற்றிறே" என்பர் பெரியோர். நம்மாழ்வாரும் திருவாய்மொழியில் "தனிமையும் பெரிதுனக்கு, இராமனையு முவர்த் தலை உடன் திரிகிலை யென்றென் றூடுற என்னுடையாவிவேமால்" என்றருளிச்செய்கிறார். கண்ணபிரான் நம்பி மூத்தபிரானோடு கூடவே செல்லச் செய்தேயும் அஸ்தாநபய சங்கையாலே 'கண்ணா! நீ காட்டிலே திரியாநின்றாய்; எழும்பூண்டெல்லாம் அசுரப்பூண்டாயிராநின்றது; பலராமன் உடனிருக்கின்றானே யென்று ஆறியிருப்பதற்குமில்லை; அவனை நீ பிரியாதிருந்தாயாகில் அவத்ய சங்கைக்கு அவகாசமிராது கிடாய்; நீயோ அவனோடு சேர்த்தியற்றுத் திரிகின்றாயே; அதனால் என்னாகுமோவென்று அஞ்சுகின்றேன்' என்று வயிறு பிடிக்கிறாராழ்வார். இவற்றால், பெரும்பாலும் க்ருஷ்ண பலராமர்களுக்குச் சேர்த்தியேயுள்ளதென்னுமிடம் தெரியவரும். இருவருடைய சரித்திரமும் சேர்ந்தே பரமபோக்யமாகிறது. பாலும் சர்க்கரையும் தனித்தனியும் போக்யமானாலும் இரண்டும் சேர்ந்து பரம போக்யமாகிறாப்போலே ஸ்ரீ க்ருஷ்ண பலராம சரித்திரங்களிரண்டும் சேர்ந்து பரம போக்யமாகின்றனவென்று இங்கு அருளிச்செய்வது மிகப் பொருத்தமானது. * மைந்நம்பு வேற்கண்ணல்லாள் முன்னம் பெற்ற வளைவண்ண நன்மாமேனி, தன்னம்பி நம்பியுமிங்கு வளர்ந்தது அவனிவை செய்தறியான், பொய்ந்நம்பி புள்ளுவன் கள்வம் பொதியறை போகின்றவா தவழ்ந்திட்டு, இந்நம்பி நம்பியா! ஆய்ச்சியர்க்குய்வில்லை என்செய்கேனென்செய்கேனோ? * என்று ஒரு கோபீஸமாதியாலே திருமங்கையாழ்வா ரருளிச்செய்கிறபடி மிகவழகியது. இப்பாசுரத்தின் கருத்தாவது-இத்திருவாய்ப்பாடியிலே பலராமனும் வளராநின்றான்; அவன் ஒருவிதமான வம்புதும்பும் செய்வதில்லை; இக் கண்ணபிரானே பொறுக்கொணாத் தீம்புகள் செய்து போருகின்றானென்கை. பலராமனுடைய ஸாதுத்வமும் கண்ணனுடைய துஷ்டத்வமும் சேர்ந்து பரம போக்யதையை யளிக்கின்றன போலும். * கொந்தளமாக்கிப் பரக்கழித்துக் குறும்பு செய்வானோர்மகன் * என்றும் * அல்லல் விளைத்த பெருமான் * என்றும் * மெய்போலும் பொய்வல்லன் * என்றும் * தருமமறியாக் குறும்பன் * என்றும் தீம்பிலே முடிசூட நின்ற தம்பியின் சரிதையும், இந்நிலைக்கு எதிரான நிலையிலே நின்ற தமையன் சரிதையும் கூடிப் பரமபோக்ய மாகின்றதாய்த்து ஸ்வாமி தேசிகனுக்கு.

[**பக்கத் கௌரவபட்டண ப்ரப்ருதய:**] கௌரவபட்டணமென்பது ஹஸ்திநாபுரம்; அதை யொருகால் பலராமன் தனது ஹலாயுதத்திலே மாட்டிக் கவிழ்த்தனனென்னுங் கதை இதில் அநுஸந்திக்கப்பட்டதாயிற்று. [**ப்ராஸ்த ப்ரலம்பாதய:**] *தேனுகன் பிலம்பன் காளியனென்னுந் தீப்பப் பூடுகளடங்க வுழக்கி * என்று பெரியாழ்வார் ப்ரலம்பாஸுர வதத்தை ஸ்ரீ கிருஷ்ண சேஷ்டிதமாகவே கூறி யநுபவித்திருந்தாலும் * பிலம்பன் தன்னைப் பண்ணழியப் பலதேவன் வென்ற பாண்டிவடத்து * என்ற நாச்சியார் திருமொழியின்படியும் புராண வரலாற்றின்படியும் அது பலராம சேஷ்டிதமேயாம். சூர்ப்பணகையின் அங்கபங்கம் இளையபெருமாள் செய்ததா யிருக்கச்செய்தேயும் ஆழ்வார்கள் அதனைப் பெருமாள் செய்த செயலாகவே அருளிச்செய்வர்களிறே. அது போலவே ப்ரலம்பாஸுர வதத்தை ஸ்ரீ க்ருஷ்ண க்ருதமாகச் சொல்லுவதிலும் குறையில்லையாம்.

[**தாலாங்கஸ்ய**] தாலவ்ருக்ஷத்தை த்வஜமாகவுடையனென்னுங் காரணத்தினால் நம்பி மூத்தபிரானுக்குத் **தாலாங்கனென்று** திருநாமம். "தாலாங்கோ முஸலீ ஹலீ" என்ற நிகண்டுவும் காண்க. [**ததாவிதா விஹ்ருதய:**] கண்ணபிரானோடு கூடி நிகழ்த்திய விஹாரங்கள் அப்ரமேயங்களாகையாலே '**ததாவிதா:**' என்னு

மித்தனை. [நஃ பத்ராணி தந்வந்து.] விஹாரங்களைச் செய்தருளிய நம்பிமூத்தபிரான் நமக்கு க்ஷேமங்களை யளித்தருள வேணுமென்பதே பரமதாத்பர்யம். விஹாரங்களினிடத்தே ப்ரார்த்திப்பதானது விஹார கர்த்தாவினிடத்தே ப்ரார்த்திக்கிறபடியாமத்தனை. ... ... .... .... (9)

नाथायैव नमःपदं भवतु नश्चित्रैश्चरित्रक्रमैः भूयोभिर्भुवनान्यमूनि कुहनागोपाय गोपायते ।
कालिन्दीरसिकाय कालियफणिस्फारस्फटावाटिकारङ्गोत्सङ्गविशङ्कचङ्क्रमधुरापर्यायचर्या यते ॥ १०

நாதாயைவ நமஃபதம் பவது நஃ சித்ரைச் சரித்ர க்ரமைஃ
பூயோபிர் புவநாந் யமூநி குஹநாகோபாய கோபாயதே
காளிந்திரஸிகாய காலியபணி ஸ்பாரஸ்படா வாடிகா
ரங்கோத்ஸங்க விசங்கசங்க்ரமதுரா பர்யாய சர்யா யதே. (௰)

## பக்கலக்கப் பிழைதிருத்தம் (கவனிக்க)

—o—

ஸ்ரீராமாநுஜன் நெ. 93-ல் தேசிக ஸ்தோத்ரவுரை அச்சிட ஆரம்பமாயிற்று. அதில் 1—16 பக்கங்கள் வெளியாயின. அடுத்தபடியாக நெ. 94-ல் 17—32 பக்கங்கள் வெளியாயின. அதற்கடுத்தபடியாக நெ. 96-ல் வெளியாகும்போது பக்கலக்கம் 33 ஆரம்பிக்க வேண்டியிருக்க, தவறாக 49 ஆரம்பமாய்விட்டது. பாரம் நெம்பரும் 5-க்கு பதிலாக 7 என்று விழுந்துவிட்டது. இப்படி நேர்ந்த பிழையினால் 33—48 பக்கங்கள் இல்லையே யென்று பலர் சிந்திக்க வேண்டியதாயிற்று. அச்சுக் கூடத்தில் நேர்ந்த இவ்வச்சுப் பிழையை யாவரும் கவனிக்கவேணும்.

ஸ்ரீராமாநுஜன் 96-ல் தசாவதார ஸ்தோத்ரம் ஆரம்பமுள்ளது. அந்தப் பக்கத்திற்கு 49 என்கிற லக்கம் பிசகு. விஷயம் யாதும் விடுபடவில்லை. அந்த 96-ம் நெ. ஸஞ்சிகையில் 49—64 என்கிற பக்கலக்கங்களை 33—48 ஆகத் திருத்திக்கொள்ள வேண்டியது அவசியம். அதனால் இப்போது பக்கலக்கம் 65 என்று கொடாமல் 49 தான் ஆரம்பமாகிறது. பாரலக்கமும் 7 தான் இடப்படுகிறது. இந்தப்பிழைகளை அவரவர்கள் மசியால் திருத்திக்கொள்ளவே வேண்டும். பக்கலக்கங்களை கவனிக்காமல் விஷயத்தின்மீது சென்றால் ஒன்றும் விடுபட்டிராது. பாரங்களை ஸஞ்சிகையிலிருந்து பயிண்டு செய்வதற்காகப் பிரித்தெடுக்கும்போது கோளாறு ஏற்படும்; அது ஏற்படாமைக்காக இந்தத் திருத்தம் தெரிவிக்கப்பட்டது.

| | | | |
|---|---|---|---|
| பூயோபிঃ சித்ரைঃ சரித்ரக்ரமைঃ | பலவகைப்பட்ட ஆச்சர்ய சேஷ்டித விசேஷங்களாலே | காளியபணி ஸ்பார ஸ்படா வாடிகா ரங்க உத்ஸங்க விசங்க சங்க்ரம தூரா பர்யாய சர்யாঃ | காளிய நாகத்தின் விசாலமான பணமண்டலமாகிற நாட்ய மண்டப மத்யத்திலே நிர்ப்பயமாக நடனத்தை நிர்வஹிப்பது முதலான செயல்களை |
| அமூநி புவ்நாநி | இந்தவுலகங்களை | யதே | அடைந்திருப்பவனுமான |
| கோபாயதே | காத்தருள்பவனும் | குஹநாகோபாய நாதாய ஏவ | கோபாலக்ருஷ்ண பகவான் பொருட்டே |
| காலிந்தீ ரஸிகாய | யமுனைத்துறை விளையாட்டில் ருசி கண்டவனும் | நঃ நமঃபதம் பவது | நமது நமஸ்காரோக்தியாகுக. |

*** ஸ்ரீ க்ருஷ்ணவதார சேஷ்டிதாநுபவபரமாய்ச் செல்லுகிறது இந்த ச்லோகம். கீழ் ச்லோகத்திலே நம்பிமூத்தபிரானுடைய சரித்திரமும் கண்ணபிரானுடைய சரித்திரமும் ஒன்றுகூடியே பரமபோக்யமாகின்றன வென்றதனால் அவ்விரண்டு திருமூர்த்திகளும் ஒருவரையொருவர் விட்டுப் பிரியாமல் கூடியே களிப்பர்களென்பது தெரிவிக்கப்பட்டது. ஒருகால் ஒருவரை யொருவர் விட்டுப் பிரிந்தவாறே நிகழ்ந்த நிகழ்ச்சியை இந்த ச்லோகத்தினால் [உத்தரார்த்தத்திலே] அருளிச் செய்து அநுபவிக்கிறார்.

[நঃநமঃ **பதம் நாதாயைவ பவது**] * நம உக்திமதீமஹே * நமோவாகமதீமஹே * என்னுமாபோலே சொல்லுகிறதாயிற்றிதுவும். வாசிகமான ப்ரணாமோக்தியும் காயிகமான ப்ரணாமாநுஷ்டானத்தின் ஸ்தானத்திலே நின்று காரியகரமாகக் குறையில்லை. கோபீ ஜநநாதனென்றும் யதுகுலநாதனென்றும் மதுராநாதனென்று மிப்புடைகளிலேயுள்ள ப்ரஸித்திகளைத் திருவுள்ளம்பற்றி நாதாய என்றருளிச் செய்தது, கண்ணபிரான் பொருட்டு என்றபடி. [**குஹநா கோபாய**] அவனுடைய பராத்பரமான ஸ்வரூபத்திலே யாதவத்வ கோபாலத்வாதிகள் ஒன்றும் இல்லையாயிருக்கச் செய்தேயும் ஸ்வஸங்கல்பத்தாலே கோபாலத்வத்தை ஆவாஹநம் செய்துகொண்டபடி. குஹநாசப்தார்த்தமிதுவேயாகக்கடவது. கோநிரை காப்பதற்குக் கோவர்த்தனமென்னுங் கொற்றக் குடையை யெடுத்தபோது * கொடியேறு செந்தாமரைக் கைவிரல்கள் கோலமுமழிந்தில வாடிற்றில வடிவேறு திருவுகிர் நொந்துமில * என்னும்படியாக ஏழுநாள் ஏகரூபமாக நின்றவளவிலே இடையர்களெல்லாருங்கூடி இவனைத் தேவனாக அதிசங்கித்துக் கேள்வி கேட்கையில் * **அஹம் வோ பாந்தவோ ஜாதঃ** * என்று, நானும் இடையர்களாகிற வுங்களுக்குள்ளே ஒரு இடையனாகப் பிறந்தவனே யல்லது தேவனுமல்லேன் தானவனுமல்லேன் என்றான். இதையிட்டு "தேவத்வமும் நிந்தையானவனுக்கு ஒளிவரும் ஜநிகள் போலே" என்று ஆசார்ய ஹ்ருதய சூர்ணையவதரித்தது. கோபாலனாகிச் செய்த செயல்களெல்லாம் லோகஸம்ரக்ஷணத்திலேயே உபகூணங்களென்கிறார் [**பூயோபிঃ சித்ரைச் சரித்ரக்ரமைঃ அமூநி புவநாநி கோபாயதே**] என்பதனால். கன்றுகளோடச் செவியில் கட்டெறும்பு பிடித்திட்டது, எண்ணெய்க் குடத்தை யுருட்டியிளம்பிள்ளை கிள்ளியெழுப்பிக் கண்ணைப் புரட்டி விழித்தது, வெண்ணெய் விழுங்கி வெறுங் கலத்தை வெற்பிடையிட்டதனோசை கேட்டது, அருகிருந்தார்தம்மை யநியாயஞ் செய்தது, இல்லம் புகுந்தொரு மகளைக் கூவிக் கையில் வளையைக் கழற்றிக்கொண்டு கொல்லையில் நின்றுங் கொணர்ந்துவிற்ற அங்கொருத்திக்கு அவ்வளை கொடுத்து நல்லன நாவற்பழங்கள் கொண்டு நானல்லேனென்று சிரித்தது, ஆற்றிலிருந்து விளையாடுவார்களைச் சேற்றாலெறிந்து வளைதுகிலைக் கைக் கொண்டு காற்றில் கடியனா

யோடியகம்புக்கு மாற்றமும் தாராதிருந்தது, வண்ணக் கருங்குழல் மாதர்வந் தலர் தூற்றிடப்பண்ணிப் பலசெய்து பாடியெங்குந்திரிந்தது, சந்தமலர்க்குழலாளொருத்தி தனியே விளையாடுமிடங் குறுகிப் பந்துபறித்துத் துகில்பற்றிக் கீறிப் படிறுசெய்தது, புள்வாய் பிளந்து சகடமிறச் சாடிப் பேய்ச்சிமுலை சுவைத்து மாவாய் பிளந்து மருதஞ் சாய்த்து அளை வெண்ணெயுண்டாப்புண்டிருந்தது முதலான சரிதைகளிலே எதைச் சிந்தித்தாலும் * ஜந்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்வதஃ, த்யக்த்வா தேஹம் புநர் ஜந்ம நைதி மாமேதி ஸோர்ஜுந * என்று தானே, கீதையில் அருளிச்செய்தபடியே ஸம்ஸாரபந்த விமுக்தி பூர்வக மோக்ஷப்ராப்தியே பலிக்குமாகையாலே "சித்ரைச் சரித்ரக்ரமைஃ அமூநி புவநாநி கோபாயஸே" என்னக் குறையில்லையிறே. * வதுவை வார்த்தையுளேறுபாய்ந்ததும் மாயமா வினைவாய் பிளந்ததும் மதுவைவார் குழலார் குரவை பிணைந்த குழகும், அதுவிதுவுது வென்னலாவனவல்ல என்னையுன் செய்கை நைவிக்கும் * என்று நம்மாழ்வாரும், * இங்கிதம் நிமிஷிதஞ்ச தாவகம் ரம்யமத்புத மதிப்ரியங்கரம் * [ஸுந்தர பாஹுஸ்தவே] என்று ஆழ்வானுமருளிச் செய்தபடியே ஸ்ரீ க்ருஷ்ண சேஷ்டிதங்களிலே இதுவதுவுது வென்னும் வாசியின்றிக்கே ஒவ்வொன்றும் அநுஸந்தான மாத்திரத்தினால் ஸம்ஸாரி சேதந ஸம்ரக்ஷண ஸமர்த்தமாயிருக்குமாயிற்று.

[காளிந்தீரஸிகாய] தூய பெருநீர் யமுனைத் துறையிலே செய்த திருவிளையாடல்களையெல்லாம் நினைந்து நைந்துள் கரைந்துருகி அருளிச்செய்கிற விசேஷணமாயிற்றிது. பராத்பரனானவன் விரஜாதீரத்தைவிட்டு இந் நிலத்திற்கு எழுந்தருளும்போதுகளில் அந்த விரஜைதானே ஸரயுவாகவும் யமுனையாகவும் வடிவெடுக்குமென்பர். அயோத்திமா நகரிலே ஸரயூநதியிருந்தும் சக்கரவர்த்தி திருமகனார் அதிலே புக்கு ஆடினமையை ஸ்ரீ ராமாயணம் ஓரிடத்திலும் தெரிவித்ததில்லை. க்ருஷ்ணாவதார சேஷ்டிதங்கள் பெரும்பாலும் யமுநாநதியை க்ருதார்த்தமாக்கினவைகாணும். * இங்குத்தை வாழ்வையொழியவேபோய் யமுனைக்கரைக்கென்னையுய்த்திடுமின் * என்றாளாண்டாள்; * ஸரயுக்கரைக்கென்னை யுய்த்திடுமின் * என்று பேசினாருமில்லை.

* காளியன் பொய்கை கலங்கப் பாய்ந்திட்டு அவன் நீண்முடியைந்திலும் நின்று நடஞ்செய்த வோரபதானத்திலே யீடுபட்டுப் பேசுகிறார் [காளியபணிஸ்பாரஸ்பட்டாவாடிகேத்யாதி] யமுனையாற்றில் ஓர் மடுவில் இருந்துகொண்டு அம் மடு முழுவதையும் தன் விஷாக்னியினால் கொதிப்படைந்த நீருள்ளதாக்கிப் பெருங்கேடு விளைத்த காளியனென்னுங் கொடிய நாகத்தைக் கொழுப்படக்க நினைத்த கண்ணபிரான் * பல்லவந்திகழ் பூங்கடம்பேறி அக்காளியன் பணவரங்கில் ஒல்லை வந்துஉறப் பாய்ந்து அருநடஞ்செய்த வும்பர் கோன் * என்றும் * நஞ்சுமிழ் நாகங் கிடந்த நற்பொய்கை புக்கு அஞ்சப் பணத்தின்மேல் பாய்ந்திட்டருள் செய்த அஞ்சனவண்ணன் * என்றும் சொல்லுகிறபடியே அந்த நாகத்தின் தலைமீது நின்று நிச்சங்கமாகச் செய்த தாண்டவத்தைப் பேசுகிறபடி. இவ்வபதானத்தை யாதவாப்யுதயத்திலே அருளிச்செய்யுமிடத்து (4-125.) * अभजत यमुना विशुद्धिमग्र्यां शमितबहिर्मतसंप्लवा त्रयीव — அபஜத யமுநா விசுத்திமக்ர்யாம் சமிதபஹிர்மத ஸம்ப்லவா த்ரயீவ * என்று கூறினது இங்கே அநுஸந்தேயம். ஐந்தலைவாய் நாகமான காளியன் யமுனையாற்றைக் கலக்கிக் கெடுத்தது விஷவாக்குக்களான புறமதத்தவர்கள் யதேச்சமாகக் கூறும் தவறான பொருள்களாலே வேதத்தைக் கெடுத்தபடியென்றும், யமுனையில் நேர்ந்த கெடுதலைக் கண்ணபிரான் நீக்கி யமுனையை எல்லாரும் இனிமையாகப் பருகும்படி செய்தது—வேதத்தில் பிறர் கூறின அபராதங்களை எம்பெருமானார்போல்வார் நீக்கியருளி வேதத்தை ஸத்துக்களுக்கு உபஜீவ்யமாக்கினபடியென்றும் அருளிச்செய்தவிது ஸ்வாப தேசார்த்த முறையிலே ஸுஸங்கதம். காளியன் ஐந்து தலைகளாலும் நஞ்சையுமிழ்ந்து நாசம் விளைத்ததுபோல் புறமதத்தவர்கள் ஐந்துவித

மான துர்வாதங்களாலே நாசம் விளைவிக்கின்றனர். எங்ஙனேயென்னில்; ஈச்வரனே யில்லை யென்னுதல், ஈச்வரன் உண்டெனிலும் அவன் அநுமானத்தினால் ஸித்திப்பவனே யன்றி சாஸ்திரத்தால் ஸித்திப்பவனல்லனென்னுதல், சாஸ்திரங்களைக் கொண்டே ஈச்வரனை யங்கீகரித்தும், அவனுக்குத் திருமேனியும், திருக்கல்யாண குணங்களும் இல்லை யென்னுதல், ஈச்வரன் ஒருவனே யல்லன், பல ஈச்வரர்களுளர் என்னுதல், பிரபஞ்சமே யில்லை, ஸர்வம் சூன்யம் என்னுதல்—ஆக இப்படிப்பட்ட ஐவகையான அபார்த்தங்களினால் புறமதத்தவர்கள் வேதங்களைக் கெடுக்க, அந்தக் கெடுதல்களைப் பரம வைதிக ஸார்வ பௌமர்கள் ஸ்வதிவ்யஸூக்தி ஸுதா வ்ருஷ்டிகளாலே போக்கியருள்வதுமன்றிக்கே, காளியன் தலையிலே கண்ணபிரான் அடியிட்டு நடனம் புரிந்தாப்போலே *நாவலிட்டுழிதருகின்றோம் நமன்தமர் தலைகள்மீதே* என்றும், *तदन्यमतदुर्मदज्वलितचेतसां वादिनां शिरस्सु निहितं मया पदमदक्षिणं लक्ष्यताम् ததந்யமத துர்மத ஜ்வலித சேதஸாம் வாதிநாம் சிரஸ்ஸு நிஹிதம் மயாபதமதக்ஷிணம் லக்ஷ்யதாம்* என்றும் சொல்லுகிறபடியே தீயார்களின் தலைமீதடியிட்டுத் தாண்டவமுமாடுவர்கள்.

ச்லோகத்தின் முடிவில் **பர்யாய சர்யாய**, என்றும் தே என்றும் சிலர் பதம் பிரிப்பர்கள்; அது ஸங்கதமன்று; பர்யாய சர்யா:, யதே என்று பதச் சேதமாகக் கடவது. இண் தாதுவிலே சதர்ப்ரத்யயாந்தமாக நிஷ்பந்நமாகிற சப்தம் யந் என்பது; அதன் சதுர்த்த்யேக வசநரூபம் யதே என்பது. ப்ராப்நுவதே என்றபடி. .... .... .... .... *(ம)

भाविन्या दशया भवन्निह भवध्वंसाय नः कल्पतां कल्की विष्णुयशस्सुतः कलिकथाकालुष्यकूलंकषः ।
निश्शेषक्षतकण्टके क्षितितले धाराजलौघैर्ध्रुवं धर्मं कार्तयुगं प्ररोहयति यन्निस्त्रिंशधाराधरः ॥ ११

**பாவிந்யா தசயா பவந்நிஹ பவத்வம்ஸாய ந: கல்பதாம்**
**கல்கீ விஷ்ணுயசஸ்ஸுத: கலிகதாகாலுஷ்ய கூலங்கஷ:,**
**நிச்சேஷக்ஷதகண்டகே க்ஷிதிதலே தாராஜலௌகைர் த்ருவம்**
**தர்மம் கார்த்தயுகம் ப்ரரோஹயதி யந்நிஸ்த்ரிம்ச தாராதர:** (11)

| | | | |
|---|---|---|---|
| பாவிந்யா தசயா | இனி விளையப்போகிற அவதாரத்தோடு | யத் நிஸ்த்ரிம்ச தாரா தர: | எந்த கல்கி பகவானுடைய கத்தியாகிற காளமேகமானது |
| இஹ பவந் | தசாவதாரப் பெருமாள் ஸந்நிதியான இவ்விடத்திலே ஸத்தை பெற்றிருப்பவரும் | நிச்சேஷக்ஷத கண்டகே க்ஷிதிதலே | மிச்சமின்றி யொழிக்கப்பட்ட கண்டகர்களை [பாபிகளை]யுடையதாகச் செய்யப்பட்ட பூமண்டலத்திலே |
| விஷ்ணுயசஸ் ஸுத: | விஷ்ணுயசஸ்ஸென்பவர்க்குப் புத்திரனாக அவதரிக்கப் போகிறவரும் | தாராஜல ஓகை: | கத்தி முனையாகிய ஜல ப்ரவாஹங்களினாலே |
| கலிகதா காலுஷ்ய கூலங்கஷ: | கலி கல்மஷங்களைத் தொலைக்கப் போகிற வருமான | கார்த்தயுகம் தர்மம் | க்ருதயுக தர்மத்தை |
| கல்கீ | கல்கிபகவான் | த்ருவம் ப்ரரோஹயதி | நிச்சயமாக அபிவிருத்தி செய்விக்கப் போகின்றதோ. |
| ந: பவத்வம்ஸாய கல்பதாம் | நமது பிறவித் துயரை யறுக்க வல்லவராக வேணும். (கல்கிபகவானது பெருமையை விவரிப்பது உத்தரார்த்தம்.) | | |

*** இனி பவிஷ்யத்தாகச் சொல்லப்படுகிற கல்கியவதாரத்தைப் பற்றிப் பேசுவது: கூரத்தாழ்வான் ஸுந்தரபாஹு ஸ்தவத்திலும், பட்டர் ஸ்ரீரங்க ராஜ ஸ்தவ-உத்தர சதகத்திலும் இவ்வவதாரத்தைப்பற்றி யருளிச்செய்கையில் "பகவானே! தேவரீர் கல்கியவதாரம் என்றைக்கோ செய்யத் திருவுள்ளம் பற்றியிருக்கிறது; அவ்வவதாரம் இப்போதே செய்தருள ஆவச்யகதையுள்ளபடியாலே எங்கள் கண்முகப்பே செய்தருளவேணும்" என்று அபேக்ஷித்தார்கள். பகவானுடைய எல்லா அவதாரங்களுமே தர்ம ஸம்ஸ்தாபநார்த்தமாகவானாலும் கல்கியவதாரம் விசேஷித்து க்ருதயுகதர்ம ப்ரவர்த்த நார்த்தமாகையாலே அது தன்னையருளிச் செய்கிறாரிங்கு.

## கல்கியவதார கதைச் சுருக்கம் வருமாறு :—

புருஷோத்தமனாகிய ஸ்ரீமந்நாராயணன் க்ருஷ்ணாவதாரம் செய்தருளி மண்ணின் பாரத்தை நீக்கித் தருமநெறிகளை நிலைநிறுத்தித் தன்னடிச் சோதிக்கெழுந்தருள, உடனே இப்புவியில் கலிபுருஷன் செங்கோல் செலுத்தப் புகுந்து அதர்மம் அவிவேகம் அநாசாரம் முதலியவற்றை மெல்ல ஜனங்களிடத்தில் உண்டுபண்ணிக் கொண்டு வந்து நெடுநாள்வரையில் முற்றிவிட்டான். இங்ஙனம் கலி முற்ற முற்ற ஜனங்கள் அல்பாயுஸ்ஸுக்களாவார்கள்; சரீரத்தில் வளர்த்தியும் வலிவும் குறைந்து விடப் போகிறது; அழகும் தெளிவும் தேஜஸ்ஸும் அடியோடே அழியப்போகிறது; அல்புத்திகளாகவும் ஆசாரஹீனர்களாகவும் கல்வியற்றவர்களாகவும் ஆகப் போகிறார்கள். பல சொல்லியென்? எல்லாம் தலைகீழாகப்போகிறது. பாவிகள் எல்லையில்லாமல் நிற்கப்போகிறார்கள். அப்போது நிலமங்கை தாங்கமாட்டாமல் முன்போலவே எம்பெருமானிடம் சென்று முறையிடவும் அதற்கு அவர் நானே மீண்டும் வந்து அவதரித்துத் துயர் தீர்ப்பேன் என்று அபயமளிக்கவும் நேரப்போகிறது. பிறகு பகவான் வடதிசையின்கணுள்ள சம்பளகிராமத்தில் வாஸம் செய்கிற வைதிகோத்தமனான விஷ்ணுயசஸ் என்பவருடைய மனைவியாகிய ஸுமதியினுடைய கருவிற் புகுந்து பன்னிரண்டாண்டு உறைந்து வைசாகசுக்லத்வாதசியினன்று திருவவதரிக்கப் போகிறார். பிறகு வ்யாஸர் முதலிய பெரியோர்கள் சென்று அக்குழந்தைக்கு கல்கியென்று பெயரிடப்போகிறார்கள். பிறகு கல்கிபகவான் வேதமோதுகைக்காகப் பரசுராமனை நாடிச் சிறிது நாள் குருகுலவாஸஞ் செய்து வேதங்களையும் அஸ்த்ரசஸ்த்ரங்களையும் கற்று 'தருமபரிபாலனஞ் செய்வதே குருதக்ஷிணை' என்று அப்பரசுராமனளிப்பதைக் கொண்டாடி அதிலே கண்ணுங்கருத்துமாயிருந்து அவதார காரியத்தை முடிக்கைக்காக ஸங்கல்பம் செய்துகொண்டு, விச்வஜித் அச்வமேதம் முதலிய யாகங்களைச்செய்ய வேண்டுமென்று தந்தையிடம் அநுஜ்ஞைபெற்று அதற்காகத் திக்விஜயஞ் செய்யப் புறப்பட்டு, முந்துறமுன்னம் பௌத்தர்களின் ராஜ்யத்தை நோக்கிச்சென்று அவர்கள்மேல் படையெடுத்து அங்குள்ளாரையெல்லாம் தொலைத்திட்டு அங்குநின்றும் யவநர்களுடைய ராஜ்யத்திற்குச் சென்று அங்குள்ள மிலேச்ச சேனைகளையும் அரசர்களையும் தான் குதிரைமேலேறிக் கத்தியைக் கையில்பிடித்துத் துண்டுதுண்டாக வெட்டியெறிந்து அத்தேசமெங்கும் ரத்தவெள்ளமும் பிணக்காடுமாக ஆக்கி, அத்தேசங்களில் தன்னை அநுவர்த்தித்து வரும் அரசர்களைப் பட்டாபிஷேகம் செய்வித்துத் தருமமார்க்க பரிபாலனம் செய்விக்கப்போகிறார். பிறகு கலிபுருஷன் மிக்க கோபத்துடனே உருவமெடுத்துக் கொண்டு அதர்மம் அஞ்ஞானம் முதலியவற்றுக்கு அதிஷ்டாந தெய்வங்களையுங் கூட்டிக்கொண்டு கோரரூபியாய்ப் படையெடுத்து வந்தெதிர்ப்பான். பின்பு பகவான் குதிரை மீதேறி அதிவிசித்திரமாக அச்சேனைத்திரளில் ஸஞ்சரித்துத் தான் பிடித்த கத்தியினால் அவர்களுடன் யுத்தஞ்செய்து அவர்கள் பிரயோகிக்கும்

ஆயுதங்களையும் மாயைகளையும் நீறாக்கிச் சேனைகளை ஒன்றொழியாமற் கொன்று கலி புருஷனைப் பலவகைகளிலும் பங்கப்படுத்தி அவனுடைய பராக்கிரமத்தையெல்லாம் ஒய்வித்துப் பின்பு அவன் குடுமியைப் பிடித்திழுத்து அவனது கழுத்தின்மேற் கத்தியையெறிந்து வெட்டப் புகுங்காலத்தில் அக் கலிபுருஷன் பகவானைப் பலவகை யாக வேண்டிக்கொண்டு பாதங்களிற் பணிந்து தன்னுயிரை மாத்திரம் தப்ப வைத்துக்கொண்டு இவ்வுலகைவிட்டு ஓடிப்போய் ஒளித்துக்கொள்வான். அதன்றி யும் அவனுடைய தோழர்களாகிய சோகன் விசோகன் என்ற இரண்டு பெயர் கலி புருஷனோடிப்போனதைக் கேட்டுக் கல்கி பகவான்மீது வெகு கோபங்கொண்டு எதிர்த்துவந்து யுத்தஞ்செய்ய, அவர்களை எத்தனையடி அடித்தாலும் அவர்கள் சாவின்றியே யிருப்பதைக் கண்டு இதற்கென்ன காரணமென்று யோசித்துக் கொண்டிருக்கையில் பிரமதேவன் வந்து 'ஸ்வாமிந்! இவர்களிருவரையும் ஒரு பொழுதே கொல்லவேணும்; தனித்தனியே இவர்கட்கு மரணமுண்டாகாதபடி நான் வரங்கொடுத்திருக்கிறேன்' என்று சொல்லக் கேட்டுக் கல்கிபகவான் தன்னுடைய வஜ்ராயுதத்தை யெடுத்து ஓங்கி இருவர் தலையிலும் அடிக்க அவர்கள் கீழேவிழுந்து மாண்டுபோவார்கள். இப்படி கல்கிபகவான் உலகத்திலுள்ள துஷ்டர்களையெல்லாம் ஸம்ஹரித்து அதர்மத்தை வேரறுவித்துத் தருமத்தை எங்கும் பரவச்செய்து கிருத யுகத்தைப் பிரவர்த்திப்பித்துத் தன் தாய் தந்தையர்க்கும் முத்தியளித்து, இங்ஙனம் தன்னுடைய அவதாரப்ரயோஜநம் தலைக்கட்டினவாறே பதரிகாச்ரமத்துக் கெழுந் தருளி மற்றவர்களைப்போல் யோகாப்யாஸஞ் செய்து திருவாழி திருச்சங்கு முதலிய ஸகல லக்ஷணங்களோடுங் கூடிய தனது அப்ராக்ருத திவ்ய ஸ்வரூபத்தை ஆவிஷ் கரித்துப் பின்பு, பரமபதத்திலிருந்து அநந்தகருட விஷ்வக்ஸேநாதி நித்யசூரிகள் பூர்ண கும்பமேந்தி ஸாமகானம் கோஷித்துக்கொண்டு திருவடி தொழ, சிறப் புடனே, தன்னுடைச்சோதிக் கெழுந்தருளப்போகிறார்—என்பதாம்.

[பாவிந்யா தசயா இஹ பவந்] இது தார்க்கிகவ்யவஹாரம்போன்றது. கீழ்ச் சொன்ன அவதாரங்களெல்லாம் பூததசாவிசிஷ்டங்கள்; இவ்வவதாரமொன்றே பவிஷ்யத் தசை பெற்றுள்ளது. எல்லா அவதாரங்களுக்கும் வ்யவஹிதத்வம் துல்ய மாயிருக்கச் செய்தேயும் மற்ற அவதாரங்களுக்கு பூதகாலவ்யதானம்; இவ்வவதாரத் திற்கு பவிஷ்யத்கால வ்யவதானமென்று வாசிகாண்க. भवन्निति शतृप्रत्ययान्त ப்ரயோகம் வர்த்தமானார்த்தத்திலேயே கூடுமாதலால் பவிஷ்யத்தானவிதிலே இங்ஙனே வர்த்தமாந ப்ரயோகம் செய்யத்தகுமோ வென்று சிந்திக்கவேண்டா; காலசக்ர நிர்வாஹகனான பகவானுக்கு ஸர்வகாலமும் ஸததவர்த்தமானமேயாதலால் தகுதியே யாகும். [கல்கீ நः பவத்வம்ஸாய கல்பதாம்] கல்கிபகவான் இனியவதரித்துச் செய் தருளப்போகிற விரோதிநிரஸனத்திலே முந்துறமுன்னம் தம்முடைய விரோதி நிரஸனம் ஆகவேணுமென்று ஆசைப்படுகிறார். பிறப்பதுமிறப்பதுமாகிற ஸம்ஸார துக்கத்தைப் போக்கியருள வேணுமென்கை. [விஷ்ணுயசஸ்ஸுதः] விஷ்ணுயசஸ் ஸென்பவருக்குப் புதல்வராய் கல்கிபகவான் அவதரிக்கப் போகிறதாகப் புராண ப்ரஸித்தியுள்ளதாதலால் அதையடியொற்றிப் பேசினபடி. [கலிகதா காலுஷ்ய கூலங்கஷः] கலியுகமொன்று மின்றிக்கேயருள் செய்யப்போகிறவ னென்கை.

[நிச்சேஷேத்யாதி:] பெரியாழ்வார் * கான் தொடுத்த நெறிபோகிக் கண்ட கரைக் களைந்தான் * என்று அஸுரராக்ஷஸாதி விரோதி வர்க்கங்களைக் கண்டக சப்தத்தாலே யருளிச்செய்தார்; இங்கும் கண்டகசப்தம் விரோதி வர்க்கங்களையே சொல்லுகிறது. கிழங்கிருந்து கிளராதபடி விரோதிகளையடையக் களைந்தொழிக்கப் போகிறபடி சொல்லுகிறதாயிற்று. கல்கிபகவான் கையிலே கத்திகொண்டு

வெள்ளைக் குதிரையின்மீதேறி யுலாவி விரோதிநிரஸநம் செய்யப்போகிறபடி யாலே அந்தக்கத்தியாகிற காளமேகம் வர்ஷித்து க்ருதயுக தர்மத்தை அங்குரிக்கச் செய்யுமென்கை. .... ... ... .... .... (கக)

इच्छामीन विहारकच्छप महापोत्रिन् यदृच्छाहरे (माया)रक्षावामन रोषराम करुणाकाकुत्स्थ हेलाहलिन् ।
क्रीडावल्लव कल्कवाहनदशाकल्किन्निति प्रत्यहं जल्पन्तः पुरुषाः पुनन्ति भुवनं पुण्यौघपण्यापणाः ॥ १२

**இச்சாமீந விஹாரகச்சப மஹாபோத்ரிந் யத்ருச்சாஹரே**
**ரக்ஷாவாமந ரோஷராம கருணாகாகுத்ஸ்த ஹேலாஹலிந்**
**க்ரீடாவல்லவ கல்கவாஹந! தசாகல்கிந்நிதி ப்ரத்யஹம்**
**ஜல்பந்த: புருஷா: புநந்தி புவநம் புண்யௌக பண்யாபணா:** (12)

| | | | |
|---|---|---|---|
| இச்சாமீந | ஸ்வேச்சையினால் மத்ஸ்ய மூர்த்தியானவரே! | க்ரீடாவல்லவ | விளையாட்டுக்காக ஆயர் கோமானானவனே! |
| விஹார கச்சப | க்ரீடார்த்தமாகக் கூர்மரூபியானவரே! | கல்கவாஹந | குதிரையை வாஹநமாகக் கொண்ட கல்கி பகவானே! |
| மஹாபோத்ரிந் | மஹாவராஹமூர்த்தியே! | தசாகல்கிந் | இங்ஙனே தசாவதாரங்களையும் வேஷமாகக் கொண்ட பகவானே! |
| யத்ருச்சாஹரே | யாத்ருச்சிக நரஸிம்ஹ மூர்த்தியே! | இதி | என்று இவ்வண்ணமாக |
| ரக்ஷாவாமந | தேவேந்த்ர ரக்ஷணார்த்தமாக வாமந வேஷங் கொண்டவரே! | ப்ரத்யஹம் ஜல்பந்த: | நாடோறும் வாய்வெருவுகின்றவர்களாய் |
| ரோஷராம | ரோஷமே வடிவெடுத்த பரசுராமரே! | புண்யௌக பண்ய ஆபணா: | புண்ய ஸமூஹங்களாகிற சரக்குகளுக்குக் கடை போன்றவர்களான |
| கருணாகாகுத்ஸ்த | கருணையே வடிவெடுத்த சக்ரவர்த்தி திருமகனரே! | புருஷா: | புருஷர்கள் |
| ஹேலாஹலிந் | லீலா பலராம மூர்த்தியே! | புவநம் புநந்தி | உலகத்தைப் பரிசுத்தமாக்க வல்லவர்கள். |

* * * ஒவ்வோரவதாரத்திற்கு ஒவ்வொரு ச்லோகமாக அருளிச்செய்து வந்தார் கீழ்; அந்த ச்லோகங்களைக் கண்டபாடஞ்செய்ய சக்தியற்றவர்களையும் விடமாட்டாத பரம க்ருபையினாலே "ஒரு ச்லோகத்தை யநுஸந்தித்தே தசாவதாரங்களையும் அநுபவித்தவர்களாக ஆகுக" என்னுந் திருவுள்ளங்கொண்டு அங்ஙனே யருளிச்செய்த ச்லோகமாயிற்றிது.

[**இச்சாமீந!**] * **இச்சாக்ருஹீதாபிமதோருதேஹ:** * என்று மஹர்ஷியும், * தனக்கு வேண்டுருக்கொண்டு * என்று ஆழ்வாரும் பணித்தபடியே ஸ்வேச்சையினாலே மத்ஸ்யத் திருமேனியைப் பரிக்ரஹித்தருளினவனே! என்கை. [**விஹார கச்சப!**] கீழே கூர்மாவதாரத்தைப்பற்றி யருளிச்செய்த * **அவ்யாஸுர் புவநத்ரயீம்** * இத்யாதி ச்லோகத்திலே 'விஹரதே தேவஸ் ஸஹைவ ச்ரியா' என்று பணித்த விஹாரத்தை ஸ்மரிப்பது. அநாயாஸமாகக் கூர்மாவதாரம் செய்தருளினபடியைச் சொல்லிற்றாகவுமாம். [**மஹாபோத்ரிந்**] * மலைபாறு மேழு கடலும் பாதமர் சூழ் குளம்பினக மண்டலத்திலொருபாலொடுங்க வளர்சேர், ஆதிமுனேனமாகியரணாய மூர்த்தி * என்று திருமங்கையாழ்வாரருளிச் செய்தபடியே மஹாவராஹ மூர்த்தியானவனே! [**யத்ருச்சாஹரே!**] * நரங்கலந்த சிங்கமாய் இப்படியொரு விலக்ஷணமான வடிவெடுக்கப் போகிறோமென்று அவன் தானும் அந்த க்ஷணத்திற்கு முன்னே நினைப்பிட்டதில்லையே. * அங்கப்பொழுதே அவன் வீயத் தோன்றிய

என் சிங்கப்பிரான் * என்று ஆழ்வாரருளிச் செய்தபடியே யத்ருச்சயா நரஹரியா னவனிறே. [ரக்ஷாவாமந!] வாமந ப்ரஹ்மசாரியாய் இரப்பாளனாய் வந்து நின்றது ஸ்வப்ரயோஜனத்துக்காகவன்றே; பரரக்ஷணார்த்தமிறே. [ரோஷராம!] பரசு ராமன் * என் வில்வலி கண்டு போவென்றெதிர் வந்தது ரோஷத்தாலேயிறே. அதுவுமன்றிக்கே * வென்றிமாமழுவேந்திமுன் மண்மிசை மன்னரை மூவெழுகால் கொன்றதேவா! * என்னும்படி இருபத்தோர்கால் அரசு களைகட்டதும் ரோஷத் தாலேயாயிற்று. [கருணாகாகுத்ஸ்த] இராமபிரானிடத்தே வந்தவாறே இங்ஙனே யல்லது வேறொரு விசேஷணமிட்டுச் சொல்ல வொண்ணாதிறே. * வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி து:க்கித: * என்றும் * ஸஞ்ஜாத பாஷ்ப: பரவீர ஹந்தா ராமோ முஹூர்த்தம் விமநா பபூவ * என்றும் பேசலாம்படியான கரு ணையே வடிவெடுத்த காகுத்தனாயிற்று. [ஹேலாஹலிந்!] "தாலாங்கஸ்ய ததாவிதா விஹ்ருதய:" என்று கீழே யருளிச்செய்ததை நினைப்பது. நம்பிமூத்தபிரான் கலப்பையைக் கருவியாகக் கொண்டு செய்த ஹேலைகளை யநுஸந்திப்பது.

[க்ரீடா வல்லவ!] பெரியாழ்வார் * வெண்ணெய் விழுங்கி வெறுங்கலத்தை வெற்பிடையிட்டு அதனோசை கேட்குங் கண்ணபிரான் * என்று தொடங்கிக் கண் ணபிரான் செய்த சிறுச் சேவகங்களையடையச் சொல்லிவந்து "பண்டவன் செய்த கிரீடையெல்லாம்" என்று தலைக்கட்டினார். அந்தச் சொல்லையே யிட்டு இங்கு * க்ரீடாவல்லவ! * என்கிறார். [வல்லவ: - கோபால:.] [கல்கவாஹந!] கல்க மென்று வெண்குதிரைக்குப் பெயராதலால் அதனை ஊர்தியாகக் கொண்டு அவத ரிக்கப்போகிற பெருமானே! என்கை. [தசாகல்பிந்!] * आकल्पवेषौ नेपथ्यं प्रतिकर्म प्रसाधनम् — ஆகல்பவேஷௌ நேபத்யம் ப்ரதிகர்ம ப்ரஸாதநம் * என்கிற அமர கோசத்தின்படியே ஆகல்பமென்று வேஷத்தைச் சொல்லுகிறது. மத்ஸ்யாதி களான பத்து வேஷங்களைப் பூண்டுகொள்பவனே! என்றபடி. சிலர் " "தசாகல் கிந்!" என்று பாடங்கொண்டு (கல்கவாஹந தசாகல்கிந்) என்று ஏக பதமாக நிர்வ ஹித்து ஏதோ பொருள் கூறுவர்; அது யதாவஸ்தித பாடம் தெரியாமையினாலாத் தனையென்று கொள்ளக்கடவது. அது தவறான பாடமேயாதலால் தவிர்க்கத் தக்கது.

[இதிப்ரத்யஹமித்யாதி] இவ்விதமாக நாடோறும் வாய்வெருவுகின்ற புண்ய சாலிகளான புருஷர்கள் லோகபாவநர்களாவர் என்கை. 'ஜல்பந்த:' என்றது— ஜ்வரஸந்நிபதிதரைப் போலே அக்ரமமாக [க்ரமவிவக்ஷையின்றிக்கே] சொல்லு மவர்களென்றபடி. * பேர் பல சொல்லிப் பிதற்றிப் பித்தரென்றே பிறர்கூற * என்கிற ஆழ்வாரருளிச் செயலையும் "ஜாமதக்ந்யஸ்ய ஜல்பத: என்ற பீஷ்ம வச னத்தையுமடியொற்றி யருளிச்செய்தபடி. "புண்யௌக பண்யாபணா:" என்னு மிந்த ப்ரயோகம் மிகவும் ரஸிக்கத்தக்கது. 'வித்யா நிஷத்யா' என்கிறாப்போலே இதுவும். .... ... ... ... (கக)

विद्योदन्वति वेङ्कटेश्वरकवौ जातं जगन्मङ्गलं देवेशस्य दशावतारविषयं स्तोत्रं विवक्षेत यः ।
वक्त्रे तस्य सरस्वती बहुमुखी भक्तिः परा मानसे शुद्धिः काऽपि तनौ दिशासु दशसु ख्यातिः शुभा जृम्भते ॥ १२

வித்யோதந்வதி வேங்கடேச்வரகவௌ ஜாதம் ஜகந்மங்களம்
தேவேசஸ்ய தசாவதாரவிஷயம் ஸ்தோத்ரம் விவக்ஷேத ய:
வக்த்ரே தஸ்ய ஸரஸ்வதீ பஹுமுகீ பக்தி: பரா மாநஸே
சுத்தி: காபி தநௌ திசாஸு தசஸு க்க்யாதி: சுபா ஜ்ரும்பதே (12)

| | |
|---|---|
| வித்யாஉதர்வதி | கல்விக்கடலான |
| வெங்கடேச்வர கவெள | ஸ்ரீமத் வேங்கடநாதார்ய கவியினிடத்தில் |
| ஜாதம் | தோன்றினதாய் |
| ஜகத் மங்களம் | உலகுக்கெல்லாம் மங்களாவஹமான |
| தேவேசஸ்ய தசாவதாரவிஷயம் ஸ்தோத்ரம் | தேவாதிதேவனது தசாவதாரங்களைப் பற்றின இந்தத் துதி நூலை |
| யஃ விவக்ஷத | யாவனொருவன் சொல்ல விரும்புவனே, |
| தஸ்ய வக்த்ரே | அவனுடைய வாக்கில் |
| ஸரஸ்வதீ பஹுமுகீ ஜ்ரும்பதே | ஸரஸ்வதியானவள் பஹுமுகமாகப் பரம்புவள்; |
| மாநஸே பரா பக்திஃ ஜ்ரும்பதே | மநஸ்ஸில் சிறந்த பக்தி வளரும்; |
| தநௌ காபி சுத்திஃ ஜ்ரும்பதே | உடலில் விலக்ஷணமான பரிசுத்தி விளங்கும்; |
| தசஸு திசாஸு சுபா க்யாதிஃ ஜ்ரும்பதே | பத்துத் திசைகளிலும் நல்ல யசஸ்ஸு பரவும். |

* * * இந்த நிகமந ச்லோகத்தினல் பலனருளிச் செய்து தலைக்கட்டுகிறார். இந்த ஸ்தோத்ரத்தை நித்யமநுஸந்திப்பவர்களுக்கு இன்னது பலன் என்று அருளிச்செய்கிறாரல்லர்; ஆழ்வார் * மாலிருஞ்சோலை தொழக் கருதுவதே துணிவது சூதே * என்றருளிச்செய்தாப்போலே, இந்த தசாவதார ஸ்தோத்ரத்தை [**யஃ விவக்ஷத**] யாவனொருவன் சொல்லவேணுமென்று விரும்புவானே அவனுக்குப் பெருப்பெருத்த பலன்கள் கிடைக்குமென்றருளிச்செய்கிறார்.

[**வித்யோதந்வதி வேங்கடேச்வரகவெள ஜாதம்**] ஸங்கல்ப ஸூர்யோதயத்திலே * **விம்சத்யப்தே விச்ருதநாநாவிதவித்யஃ த்ரிம்சத்வாரம் ச்ராவித சாரீரகபாஷ்யஃ** * என்றருளிச்செய்தபடியே விவித வித்யாபாரங்கதரிறே ஸ்வாமிதாம். நைச்யாநுஸந்தானத்திற்கு எல்லை நிலமான ஸ்வாமி இங்ஙனே தம்மைத் தாமே புகழ்ந்து பேசலாமோ? '**வித்யோதந்வதி**' என்று தம்மைத் தாமே கல்விக்கடலாகச் சொல்லிக்கொள்ளலாமோ? என்று சங்கிக்கவேண்டா; * தோன்று தோற்றித் துறைபல முடிப்பினும், தான் தற்புகழ்தல் தகுதியன்றே* என்று தற்புகழ்ச்சி யாகாதென்று முதலில் கூறின நன்னூலார் தாமே உடனே "..........தன்னுடையாற்றலுணராரிடையினும், தன்னைப் புகழ்தலும் தகும் புலவோற்கே" என்றுராதலால் இது கூடுமென்று தெளிக * யானே இருந்தமிழ் நன்மாலை யிணையடிக்கே சொன்னேன், பெருந்தமிழன் நல்லேன் பெரிது * என்று பேயாழ்வாரும், * என் மதிக்கு விண்ணெல்லாமுண்டோ விலை * என்று திருமழிசைப் பிரானும் அருளிச்செய்திருப்பன இங்கே அநுஸந்தேயம்.

* **ஜநிகர்த்துஃ ப்ரக்ருதிஃ** * என்கிற வியாகரண ஸூத்ரப்படி '**வேங்கடேச்வர கவேர் ஜாதம்**' என்று பஞ்சம்யந்தமாகவன்றே அருளிச்செய்திருக்கவேணும்; ஸப்தம்யந்தமாக அருளிச்செய்திருப்பது எங்ஙனே பொருந்தும்? என்று சங்கிக்கவேண்டா; * **விவக்ஷாதஃ காரகாணியாகை**யாலே இங்ஙனேயான ப்ரயோகங்களும் மஹாகவிகள் செய்வதுண்டு என்று தெளிக. [**ஜகந்மங்கலம்**] எம்பெருமானுடைய திருவவதாரங்கள் ஜகந்மங்களார்த்தமாக அமைந்தாப்போலே அவ்வவதார விஷயகமான இந்த ஸ்தோத்ர க்ருதியும் ஜகந்மங்களார்த்தமாகவே யாயிற்று அவதரித்தது. ஜகத்துக்கெல்லாம் மங்களாவஹமானது இது. [**தேவேசஸ்ய தசாவதார விஷயம் ஸ்தோத்ரம்**] தேவேசனென்பதற்கு ஷஷ்டீதத்புருஷன் பண்ணினல் தேவதாஸார்வபௌமனென்கிற பொருள் கிடைக்கும்; விசேஷணோபயபத கர்மதாரயனாகக் கொண்டால் தேவனும் ஈசனுமானவனென்று பொருளாகும். ஸ்ரீரங்கநாதனே இங்கு விவக்ஷிதன். அப்பெருமான் செய்தருளின தசாவதார விஷயமான இந்த ஸ்தோத்ரத்தை. [**யஃ விவக்ஷேத**] வக்துமிச்சா-விவக்ஷா; சொல்லவேணுமென்று நெஞ்சால் நினைக்குமளவே போதுமென்றதாயிற்று. அவ்வளவிலே கிடைக்கக்

கூடிய பலன் யாதென்ன, ஒன்றல்ல இரண்டல்ல; பல பேறுகள் கைபுகுமென்கிறார் [வக்த்ரே தஸ்ய] இத்யாதியால். ஸ்வாமி தாம் பெற்றிருக்கிற பேறுகளெல்லாம் இவ்வதிகாரிக்குக் கிடைத்தே தீருமென்கிறார். * தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்குத் தம்மையேயொக்க அருள்செய்பவன் எம்பெருமான் மட்டுமல்லனே; ஆசாரியர்களும் அங்ஙனே அருள்செய்ய வல்லவர்களாதலால் ஸ்வாமி தமக்கு விளைந்திருக்கிற பெருமைகளையெல்லாம் இங்குப் பலனாக நிர்தேசித்தருளுகிறார். மநோவாக்காயங்களில் விளையக் கூடிய நன்மைகளை முன்னமருளிச் செய்கிறார். ஸர்வகலா பாண்டித்யமுண்டாகுமென்பது முதற்பலன்; * தணிவிலர் கற்பரேல் கல்விவாயுமே* என்று ஆழ்வாருமருளிச்செய்த பலன் இது; [பக்தி: பரா மாநஸே] உள்ளத்தினுள் உயர்ந்த பக்தி ஊர்ஜிதமாகும். ஆழ்வார் * பத்தராகக் கூடும் பயிலுமினே * பத்தராவர் துவளின்றியே * என்றருளிச்செய்த பலன் இது.

[தநௌ காபி சுத்தி:] உடலிலே விலக்ஷணமானதொரு தூய்மையுண்டாகும். பெரியாழ்வார் "தமிழ்மாலை தங்கிய நாவுடையார்க்குக், கங்கையில் திருமால் கழலிணைக் கீழே குளித்திருந்த கணக்காமே" என்றருளிச்செய்த பலன் இது. * கங்கை கங்கையென்ற வாசகத்தாலே கடுவினைகளைந்திடகிற்குங் கங்கை * என்னப் பெற்ற கங்கையில் குளித்தாலுண்டாகக் கடவதான சுத்தியுண்டாகுமென்கை. [தசஸு திசாஸு சுபா க்யாதி: ஜ்ரும்பதே.] பத்துத் திசைகளிலும் நற்புகழ் படரும். பெரியாழ்வார் * இன்னிசை மாலைகளிப்பத்தும் வல்லார் உலகி லெண்டிசையும் புகழ் மிக்கின்பமதெய்துவரே * என்றருளிச்செய்த பலன் இது. கிழக்கு முதலிய திசைகளையிட்டு நான்கு திக்குக்கள் என்பது, வடகிழக்கு தென்கிழக்கு வடமேற்கு தென்மேற்கு என்கிற விதிக்குக்களையும் சேர்த்து எட்டுத் திசைகளென்பது; கீழும்மேலுமாகிற இரண்டையும் சேர்த்துப் பத்துத் திசைகளென்பது. இவையெல்லாம் ஸங்கதமே.

ஆக இந்நூலில் முதல் ச்லோகத்தாலே மங்களாசரணம் செய்து, இரண்டு முதலிய பத்து ச்லோகங்களாலே * மீனோடாமை கேழலரி குறளாய் முன்னுமிராமனாய்த் தானாய்ப் பின்னுமிராமனாய்த் தாமோதரனாய்க் கற்கியுமானான் * என்கிற தசாவதாரங்களையும் அடைவே பேசியநுபவித்து, பன்னிரண்டாம் ச்லோகத்தாலே தசாவதாரங்களையும் ஒரு சேர்த்தியாகவநுபவித்து, நிகமத்தில் பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று. ... .... .... .... (க௩)

इत्थं दशावतारस्तुतिकृतिविवृत्तिं व्यधत्त बुधभोग्याम् ।

काञ्चीवादिभयङ्करवंशीयोऽण्णङ्गराचार्यः ॥

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசாரியர் இயற்றிய

தேசிக ஸ்தோத்ரமாலா வியாக்கியானத்தில்

தசாவதார ஸ்தோத்ர வியாக்கியானம் முற்றிற்று.

Rgd. No. 2975

ஸ்ரீ...



கிடைக்குமிடம் ;—

(1) க்ரந்தமாலா ஆபிஸ், காஞ்சிபுரம்.

(2) கராலபாடி ராதாகிருஷ்ணய்யா,
229, கோவிந்தப்ப நாயகன் தெரு, மதராஸ்—1.

(3) G. ரங்கைய நாயுடு,
26, குருவப்ப செட்டி தெரு, சிந்தாத்ரிபேட்டை, மதராஸ்—2.
(இவர் சென்னையில் பிரசாரம் செய்ய நியமிக்கப்பட்டவர்.)

If un-delivered please return to:

**P. B. Annangaracharyar, L. Kancheepuram.**



84, T. A. Krishnamchari, Siromani, 13
Govindarajan Sannidhi Street,
Tirupati East.

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Sathgrantha Prakasana Sabha.
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswar Press,
Sannidhi Street, Chinna Kancheepuram.